காலம்* கி. மு. 1200 வரையில் என்று சொல்லப்படுகின்றது.

## பாரதம்

பாண்டு புத்திரருக்கும் துரியோதனதியருக்கும் இடையே நடந்த போரைக் கூறும்நூல் பாரதமாகும். வடமொழியிலுள்ள பாரதம், பழைய பாடல்களோடு காலத்துக்குக் காலம் பாடிச் சேர்க்கப்பட்ட பாடல்களையு முடையது. அப் பாடல்கள் கி. மு. நாலாம் நூற்றுண்டில் தொகுக்கப்பட்டன. * கி. மு. 400 முதல் கி. பி. 400 வரையிற் செய்யப்பட்ட பாடல்கள் அதனிடத்தே காணப்படுகின்றன என வின்சன் சிமித என்னும் ஆசிரியர் கூறுவர். § பாரதப் போர் கி. மு. 1500 க்கும் 750 க்கும் இடையில் நேர்ந்ததென டாக்டர் கிருஷ்ணசாமி ஐயங்கார் கூறுவர். § வேலாங்கைக் கோபாலையர் பாரதப் போர் கி. மு. 1194-ல் நிகழ்ந்ததென்

---

* "The Rig Veda (Verse—Veda) of Indian Aryans (Circa 1200 B C) "—A short history of Hindu India—Krishnaswami Alyangar M. A. Prof. of Indian history and archaology University of Madras.

* The Mahabharata, as we have it now, was probably put together at least as early as the fourth century B. C. from traditional war songs founded on events which took piace at a much earlier date.—Ibid.—P. 33

§ " The Mahabharata which in its present form is rather an encyclopaedia of moral teaching than an epic properly so called, includes compositions supposed to range in date between 400 B. C. and. 400 A. D."—The Oxford student's history of India–Vincent Smith P. 28

§ "The inter-tribal wars typified in the Mahabharata took place in the period between 1500 and 1000 B. C.; while the events of Ramayana should be placed between 1000 and 750 B. C.—Ancient India P. 3.

பர். § பாரதம் இற்றைக்கு 5000 ஆண்டுகளுக்குமுன் நிகழ்ந்ததெனவைத்தியா என்னும் ஆசிரியர் கூறுவர். பாரத காலத்திருந்த வியாசராற் பாரதஞ் செய்யப்பட்டதென்பதும், அது ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட நிகழ்ச்சி என்பதும் மக்களது பொதுவான நம்பிக்கை.

பாரதத்திற் பிற்காலப் பாடல்கள் பல உள்ளன என்று ஆராய்ச்சியாளர் ஒரு தலையாக ஒப்புக்கொள்கின்றமையின், அதன் முற்கால பிற்காலப் பாடல்களைப் பிரித்தறியினன்றி அது தென்னிந்திய பழஞ் சரித்திர ஆராய்ச்சிக்குச் சிறந்த பிரமாணமாக மாட்டாது.

திரௌபதியின் சுயம்வரத்துக்குச் சென்றவர்களுள் பாண்டிய அரசன் ஒருவனென்றும், சோழரும் பாண்டியரும் தருமனுக்குக் காணிக்கை அளித்தார்களென்றும், அருச்சுனன் பாண்டியன் புதல்வியாகிய சித்ராங்கதையை மணந்தானென்றும் பாரதம் கூறுகின்றது.

## இராமாயணம்

இராமாயணம் எழுதப்பட்ட காலத்தைக் குறித்து ஆராய்ச்சியாளர் பலவகையான அபிப்பிராயங்களை வெளியிட்டிருக்கின்றனர். இராமாயணம் கி. மு. மூன்று அல்லது நாலாம் நூற்றாண்டிற் செய்யப்பட்டதென டாக்டர் கிருஷ்ணசாமி ஐயங்காரவர்கள் கூறுவர். * இராமாயணத்தின்பெரும்பகுதி கி.மு. ஐந்தாம் நூற்றாண்டிற்குமுன் செய்யப்பட்டதென்றும், பல நூற்றாண்டுகளுக்குப்பின் பாடிய

---

§ The Chronology of ancient India. PP. 51—104.

* "It (Ramayana) was composed probably in the fourth or third century B. C."—History of Hindu India. P. 33

பாடல்களும் அதிற் சேர்க்கப்பட்டுள்ளனவென்றும் வின்சன் சிமித் என்னும் ஆசிரியர் கூறுவர். § இராமாயணத்தின் பெரும்பகுதி கி. மு. ஆறும் நூற்றாண்டிற் செய்யப்பட்டதென்பதே பெரும்பாலும் ஆசிரியர்களது அபிப்பிராயமாக விருக்கின்றது.

பாரத நிகழ்ச்சி இராமாயண நிகழ்ச்சிக்குப் பிற்பட்டதென்பது டாக்டர் கிருஷ்ணசாமி ஐயங்காரின் கருத்தாகும்.

இராமாயண சம்பவம் பாரதத்துக்கு முற்பட்ட நிகழ்ச்சி என்றும், இராமாயணம் எழுதப்படுவதன்முன் மாபாரதம் எழுதப்பட்டது என்றும் பெரும்பாலும் ஆசிரியர்கள் அபிப்பிராயப்படுகின்றனர்.

இராவணன் வேதங்களிற் பயிற்சியுடையவனென்றும் அவன் சாமவேதத்துக்கு இசைவகுத்தானென்றும் சொல்லப்படுகின்றான். வேதத்தை மாபாரத காலத்தவராகிய வியாசர் நான்கு கூறுபடுத்தினாரென்பது ஐதீகம். இராவணன் வேதங்களைப் பயின்று சாமவேதத்துக்கு இசைவகுத்தானயின் அது பாரத நிகழ்ச்சிக்குப் பிற்பட்ட சம்பவமாதல் வேண்டும். வேதகாலம் கி. மு. 1200 வரையில் என்று முன்னோரிடத்திற் கூறப்பட்டது.

இராமாயணம் ஆந்திரர் சோழர் பாண்டியர் கேரளர்களைப்பற்றிச் சொல்லுகின்றது. சுக்கிரீவன் வானர வீரரைப்பார்த்துப் பொன்னும் முத்துமுடைய பாண்டியனது பொன்மயமான கபாடத்தைக் காண்பீர்கள் எனக் கூறியதாகவும் கூறுகின்றது. இராமாயணத்தில் உள்ள பழம் பாடல்களையும் புதுப்பாடல்களையும் பிரித்து அறிந்து கொள்

§ "The bulk of the Ramayana is believed to have been composed before 500 B. C. but some of the additions seem to be several centuries later.-The Oxford Student's History of India P. 28

ளாத வரையில் இராமாயணம் தென்னிந்திய பழஞ் சரித்திரத்தை அறிந்து கொள்வதற்குச் சிறந்த பிரமாணமாகாது. கி. மு. ஐந்தாம் நூற்றாண்டுக்குப்பின் வட இந்தியாவிலுள்ளவர்கள் தென்னாட்டைக் குறித்து எவ்வளவு அறிந்திருந்தார்கள் என விளங்கிக் கொள்வதற்கு இராமாயணமும், பாரதமும் சிறந்த நூல்களாகும்.

பாரத இராமாயணப் பாடல்கள் தொகுக்கப்படுவதன் முன் கி. மு. 543-ல் இலங்கையை அடைந்த விசயன் பாண்டியன் குமாரத்தியை மணந்தானென்று மகாவமிசமென்னும் சிங்கள இதிகாசம் கூறுகின்றது. சோழ அரசனாகிய எல்லாளன் இலங்கையை வென்று கி. மு. 204 முதல் நாற்பத்து நான்காண்டு அரசுபுரிந்தான். எல்லாளன் சரித்திரத்தால் அக்காலத்தில் சோழ இராச்சியம் மிக உன்னத நிலை அடைந்திருந்ததெனத் தெரிகிறது. எல்லாளனுடைய சமாதி, அழிந்த நிலையில் இன்றும் அனுராதபுரத்திற் காணப்படுகின்றது. ஊர்வலங்களில் அச்சமாதிக்கு முன்னாகக் கொட்டு முழக்குகளை நிறுத்தி மௌனமாகச் செல்வது இன்றும் வழக்காக விருக்கின்றது. திடீரென ஓர் இராச்சியமேற்பட்டு உன்னத நிலையை அடைந்து விடமாட்டாது. அதற்குப் பல நூற்றாண்டுகள் பிடிக்கும்.

# II மக்கள்

## ஐவகை நிலம்

உலகிலுள்ள நிலப் பரப்பு இயற்கை அமைப்பில் காடு மலை வயல் கடற்கரை பாலைவனம் என்னும் ஐந்து வகையில் அடங்கும். உலகுக்கே உரிய இவ்வைந்து அமைப்பும் இந்தியாவுக்குண்டு. அவ்வந் நிலங்களில் வளரும் மரம்

கொடி பூண்டு முதலியவற்றின் சிறப்புகளால் அந்நிலங்கள் முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் * பாலை என்னும் பெயர்களைப் பெறும். தமிழர் விந்தமலைக்குத் தெற்கே வாழ நேர்ந்ததன்பின் பாலை நிலத்தை அறியாராதலின் அவர் முதுவேனிற் காலத்து வெய்யிலின் வெப்பத்தால் மரஞ்செடிகள் தீய்ந்த முல்லையுங் குறிஞ்சியும் சார்ந்த நிலங்களைப் பாலை நிலம் எனக் கூறினர் அவ்வந் நிலங்களுக் குரிய தெய்வம், உணவு, விலங்கு, மரம், புள், பறை, தொழில், யாழ் முதலியன அவ்வத்திணைக்குரிய பாடல்களிற் கூறப்படுகின்றன.

முல்லைக்குத் தெய்வம் மாயோன்; உணவு வரகுஞ் சாமையும்; மா, முயலும் சிறுமானும்; மரம் கொன்றையும் குருந்தும்; புள், கானங்கோழியும் மயிலும் § சிவலும்; பறை § ஏறு கோட்பறையும் முரசும்; செய்தி, வரகு களைகட்டலும் அவை அறுத்தலுங் கடா விடுதலும் நிரை மேய்த்தலும் ஏறுகோடலும்; பண், முல்லை; தலைவன் பெயர், குறும்பொறை நாடன்; தலைமகள் பெயர், கிழத்தி மனைவி; இப்பெயர்மருத நிலைத்துத் தலைமகட்கும் உரியது; பூ, முல்லையும் தோன்றியும் ; நீர், கான்யாறு ; ஊர், பாடியுஞ் சேரியும்; மக்கள், பெயர் இடையர் இடைச்சியர் ஆயர் ஆய்ச்சியர்.

குறிஞ்சிக்குத் தெய்வம் முருகவேள் ; உணு ஐவன நெல்லும் தினையும்; மா புலியும் பன்றியும் யானையும்; மரம் அகிலும் திமிசுந் தேக்கும் வேங்கையும் ; புள் கிளியும் மயிலும், பறை வெறியாட்டுப் பறையுந், தொண்டகப்பறையுங், குரவைப்பறையும் ; செய்தி தேனழித்தலும் கிழங்ககழ்

---

* முல்லையுங் குறிஞ்சியும் முறைமையிற் றிரிந்து
நல்லியல் பழிந்து நடுங்கு துயருறுத்துப்
பாலை யென்பதோர் படிவங் கொள்ளும் (சிலப்)

§ கவுதாரி § ஏறு தழுவல்

தலும் குன்ற மாடுதலும் தினைக்கிளி கடிதலும்; யாழ் குறிஞ்சியாழ்; தலைமகன் பெயர்சிலம்பன், வெற்பன், பொருப்பன்; தலைமகள் பெயர் கொடிச்சி, குறத்தி; நீர் அருவி நீருஞ் சுனைநீரும்; ஊர் சிறு குடியும் குறிச்சியும்; பூ குறிஞ்சியுங் காந்தளும் வேங்கையும் சுனைக் குவளையும்; மக்கள் பெயர் குறவர் இறவுளர் குன்றவர்.

மருதத்துக்குத் தெய்வம் இந்திரன்: உணா செந்நெல்லும் வெண்ணெல்லும்: மா எருமையும் நீர்நாயும்: மரம் வஞ்சியுங் காஞ்சியும் மருதம்: புள் நீர்க் கோழியுந்தாராவும்; பறை மணமுழவும் நெல்லரி கிணையும்: செய்தி நெல்லரிதலும் அவை கடாவிடுதலும் பயிர்க்குக் களைகட்டலும்; யாழ் மருதயாழ்; தலைமகன் பெயர் ஊரன் மகிழ்னன்; தலைமகள் பெயர் கிழத்தி மனைவி; பூ தாமரைப் பூவுஞ் செங்கழுநீர்ப் பூவும்; நீர் மனைக் கிணறும் பொய்கையும் யாறும்; ஊர் பேரூர் எனப்படும்; மக்கள் பெயர் கடையர் கடைச்சியர் உழவர் உழத்தியர்.

நெய்தற்குத் தெய்வம் வருணன்: உணா மீன் விலையும் உப்பு விலையும்: மா சுறவும் முதலையும்; மரம் புன்னையும் ஞாழலும் கண்டலும்; புள் அன்னமும் அன்றிலு மகன்றிலும்; பறை மீன் கோட்பறையும் நாவாய்ப்பறையும்: செய்தி மீன் விற்றலும் உப்பு விற்றலும் அவை படுத்தலும்; யாழ் விளரியாழ்; தலைமகன் பெயர் துறைவன் கொண்கன்; தலைமகள் பெயர் நுளைச்சி பரத்தி; நீர் மணற்கிணறும் உவர்க் கழியும்; பூ வெள்ளிதழ்க் கைதையும் நெய்தலும்; ஊர் கலமேறு பட்டினமுஞ் சிறு குடியும் பாக்கமும்; மக்கள் பெயர் பரதர் பரத்தியர் நுளையர் நுளைச்சியர்.

பாலைக்குத் தெய்வம் காளி; உணா ஆறலைத்தனவும் ஊரெறிந் தனவும்; மா வலியழிந்த யானையும் புலியுஞ் செந்நாயும்: மரம் இருப்பையும் ஓமையும்; புள் கழுதும் பருந்

தும் புறவும் ; பறை பூசற் பறையும் ஊரெறி பறையும் நிரை கோட் பறையும் ; செய்தி நிரைகோடலும் சாத் தெறிதலும் சூறையாடலும்; பண் பஞ்சுரம் ; தலைமகன் பெயர் மீளி விடலை காளை ; தலைமகள் பெயர் எயிற்றி பேதை ; பூ மராம் பூவுங் குராம்பூவும் பாதிரிப் பூவும் ; நீர் வறுநீர்க் கூவலும் அறு நீர்ச்சுனையும் ; மக்கள் எயினர் எயிற்றியர் மறவர் மறத்தியர்; ஊர் கொல்குறும்பு.

ஐவகை நிலங்களின் கருப் பொருள் முதலிய வற்றுல் அந் நிலங்களின் தன்மையும் மக்களின் வாழ்க்கை முறையும் ஓரளவில் விளங்குகின்றன.

## குறிஞ்சி நில மக்கள்

மனிதன் ஆரம்பத்திற் குறிஞ்சி நிலத்திலேயே தனது வாழ்க்கையைத் தொடங்கினான். கொடிய விலங்கினங்களினின்றும் அவனைக் காப்பதற்கேற்ற குகைகள் அங்குத்தானுண்டு. மண்ணினால் ஏனங்களைச் செய்து அவற்றில் நீரை நிரப்பி வைத்திருக்க அவன் அறியாத காலத்து, மலையிலுள்ள நீரூற்றுகள் வறண்டனவாயின், கற்பாறை மீது பள்ளங்களில் தேக்கிநின்ற நீரை அருந்தினான். காலடியிற் கிடந்த கோடாங் கற்கள் அவனுக்கு முற்பருவததது ஆயுதங்களாக உதவின. பல வடிவங்களிற் காணப்பட்ட கற்கள், கோடரி ஈட்டி உளி முதலிய பலவகையான ஆயுதங்களைச் செய்வதற்குரிய அறிவை அவனுக்கு அளித்தன. இந்நிலையில் இருந்தே அவனது நாகரிகம் வளர்ந்து பழைய கற்காலத்தை அடைந்தது. அக்காலமக்கள் பயன்படுத்திய கல்லாயுதங்கள் குடப்பா, நெல்லூர், வடஆற்காடு, செங்கற்பட்டு முதலிய விடங்களிற் கண்டெடுக்கப்பட்டன.

மலையில் வாழ்க்கையை ஆரம்பித்த மனிதன் காய்கனி கிழங்கு வித்து முதலியவற்றை உண்டு சீவித்தான். இவை

எல்லாக் காலங்களிலும் கிடையாமற் போகவே அவன் மாமிச வகைகளையும் உணவாகக் கொண்டான். துட்ட மிருகங்களினின்றும் தன்னைக் காப்பாற்றிக் கொள்வதிலும் பார்க்க உணவின் பொருட்டு அவன் வேட்டையாட வேண்டியிருந்தது. ஆகவே அவன் வேட்டை ஆடுவதிற் றிறமை அடைந்தான்.

மனிதன் ஆதியில் வேட்டைத் தொழிலையே மேற் கொண்டான். உலக முழுமையும் காணப்பட்ட பழைய கற்காலக் கருவிகள் ஓரே வடிவினவாயிருத்தலின், மனிதன் வேடனாயிருந்தபோது * ஓரிடத்திற் றங்கியிராமல் இடம் விட்டு இடம் பெயர்ந்து வாழும் வாழ்க்கை உடையவனா யிருந்தான்.

வேடுவனாயிருந்த காலத்து மனிதன் இரண்டு சிறந்த தொழில்களைக் கற்றுக்கொண்டான். ஒன்று வில்லின் உப யோகம்; மற்றது தடிகளை உரைஞ்சி நெருப்பு உண்டாக்கு வது. மலையில் மண்டி வளரும் மூங்கில் இலகுவிற் பிளக் கக் கூடியதாயிருத்தல் அவன் கருத்திற் பட்டது. மூங் கிலைப் பிளந்து இரண்டு தலைகளையும் உலர்ந்த கொடிகளால் இழுத்துக் கட்டி வில்லைச் செய்து, நீண்ட கூரிய முட்களை வைத்து எய்யப் பழகிக் கொண்டான்.

இன்றும் மலைகளில் வாழும் மலைச்சாதியினர் புலியை ஓரே அம்பினாற் கொல்லக் கூடிய எய்யும் திறமையுடை யவர்களாயிருக்கின்றனர்.

---

* The ancestor of the human race must have lived in the Pliocene epoch, and the man was a roving animal at an early period, who wandered far from his home-Men of the Dawn- P. 40.

மலையிடத்து வளரும் மூங்கில் காற்றுக்கு அசைந்து ஒன்றோடு ஒன்று உரைஞ்சுதலால் தீ பிறந்தது. இதனைக் கவனித்த மனிதன் இரண்டு மரத்துண்டுகளை உரைஞ்சி நெருப்பை உண்டாக்க அறிந்துகொண்டான். அவன் இறைச்சியை நெருப்பில் வாட்டி மெதுவாக்கி உண்டான். அம்புவிற்களுடன் திரிந்த காலத்து அவன் வில்லைத் தோளிற் றரித்துக் கொண்டும் உடம்பைத் தோலால் மறைத்துக் கொண்டும் திரிந்தான்.

இவ் வழக்கமே பூணூலணியும் வழக்கமாகவும் அதில் (புஞ்சி) மான் தோலைக் கட்டும் வழக்கமாகவும் மாறின வாதல்வேண்டும்.

ஆடவர் வேட்டையின்பொருட்டு வெளியே சென்றிருந்த காலத்துப் பெண்கள் பழங்களைப் பொறுக்குவதிலும், கிழங்கு வகைகளை அகழ்வதிலும், மூங்கிலரிசி, சாமை, மலைநெல் முதலியவற்றைச் சேகரிப்பதிலும் நேரம் போக்கினர். குழந்தைகளை வளர்ப்பதும் அவர்கள் கடமையாயிருந்தது. இப் பருவத்தில் மனிதன் வீடு வாயில்களமைக்கக் கற்றுக்கொள்ளவில்லை. வீடுகள் அமைத்து வாழ்வதிலும் நிழல் மரங்களின்கீழ் அல்லது பெரிய மலைத் தாழ்வாரங்களிற் றங்குவதே தென்னிந்திய வெப்பநிலைக்கு ஏற்றதாயிருந்தது. மழை வெயில்களிலிருந்து தன்னைக் காப்பாற்றும் நோக்கமாக ஆதியில் மனிதன் வீடமைக்கவில்லை. அக்கால மனிதனின் செல்வமாகிய உணவுப் பொருள்களைச் சேகரித்து வைப்பதற்காகவே வீடுகளமைக்கப்பட்டன. இடம் விட்டு இடம் பெயர்ந்து திரியும் வாழ்க்கையை மேற்கொண்டிருந்தமையாலும், நிலையான வீடின்மையாலும், வீட்டிற் றங்கி வாழும் உணர்ச்சி அக்கால மனிதனுக்கு உண்டாகவில்லை. ஆகவே பெண்களுக்கே சொத்துரிமை

யுடையதாகிய வாழ்க்கைமுறை வளர்ச்சியடைந்தது. இவ் வாழ்க்கைக்கு வாய்ப்பாக இன்னுஞ் சில காரணங்களிருந் தன.

முற்கால மனிதன் பெரிய மணக் கிரியைகளாற் கட்டுப் படவில்லை. காதலர் ஓர் தனியிடத்திற் சந்தித்து இயற்கை மணஞ் செய்துகொண்டனர். சில நாட்களின் பின் உற வினரை அழைத்து விருந்திடுவதே அக்கால மணக்கிரியையா யிருந்தது. விவாகக் கட்டுப்பாடு எப்பொழுதும் நிலையாக இருக்கவில்லை. ஆடவருக்குச் சொத்துக்களிற் சொந்த மில்லாதிருந்ததும், இடம் விட்டு இடம் பெயரும் வாழ்க் கையுமே இதற்குக் காரணமாயிருந்தன. பெண்களே சொத் துக்கு அதிகாரிகளாய் வாழும் வாழ்க்கை நீண்டகாலம் தொடர்ந்து வளர்வதாயிற்று.

ஆடவரும் மகளிரும், சிறப்பாகப் பெண்கள் தம்மை அலங்கரித்துக்கொள்ள விரும்பினர். குறப் பெண்கள், ஓய்வு நேரங்களில் மணிகளைப் பொறுக்கி மாலையாகக் கோத்தணிந் தனர். அவற்றோடு மலர்களைப் பறித்துக் கொடிகளால் மாலை யாகத் தொடுத்துத் தரித்தனர்; தம்முடைய காதலர் வீரத் தின் அறிகுறியாக வேட்டையாடிக்கொண்டுவந்த புலிப்பல் லைக் கயிற்றிற் கோத்தணிந்தனர். இதுவே விவாக காலத்துக் கணவன் மனைவிக்குச் சூட்டும் தாலியாக மாறிற்று. கண வனையுடைய தென்னிந்தியப் பெண்கள் தாலியை மிகப் புனிதமுடையதாகப் பேணிவருகின்றனர். பெண்கள் தம்மை அலங்கரித்தற்குப் பயன்படுத்திய மற்றொன்று தழையுடை. இது, அசோகு, மா, சந்தனம் முதலியவற் றின் இலைகளை உலர்ந்த கொடிகளிற் பிணித்து அணியப் படுவதொன்றாகும். தென்னிந்தியாவிலுள்ள மலைச் சாதி யாரிடை இவ்வகை வழக்கம் இன்றும் காணப்படுகின்றது.

குறச் சிறுமியர் தினைமீது விழும் குருவிகளைப் பரண் மீதிருந்து குளிரி தட்டை முதலிய கருவிகளைத் தட்டி ஒலித்து ஓப்புவர்.* மலையிடத்துள்ள சுனைகளில் ஆடிப், பூக்களைச் சூடிக் குரவை ஆடுவர். குறவர் இராக்காலத்தே பரண்மீதிருந்து, பன்றி யானை முதலிய விலங்குகள் தினையை அழியாதபடி காவல் புரிவர். பரணிடத்தே அவர்கள் மாட்டிய நெருப்புக் கொள்ளிகள் நட்சத்திரம்போல் விளங்கும். § கானவர் தாம் எய்து கொன்ற பன்றியைக் கூறுபோட்டுச் சுற்றத்தினருக்கு அளித்துத் தாமும் உண்பர். § குறமகளிர் பாறையிடத்துத் தினையைக் காயவிட்டுச் சுனையாடச் செல்வர். அதனைப் பார்த்திருந்த குரங்குகள் தினையைக் கவர்ந்து செல்லும்.

இரவிலே தினைப்புனத்தை மேயவரும் யானையைப் பரண்மீதிருந்த கானவன் கடும் விசையுடைய கவணால் எறிவன். எறியப்பட்ட கல் அம்பைப் போலச் சென்று வேங்கையின் பூங்கொத்தைச் சிதறி மலைச்சாரலிலுள்ள தேனைச் சிதைத்துப் பலாப்பழத்துள் தங்கும். (அகம் 292) உயர்ந்த தினைப்புனத்தே சிங்கத்தை ஒத்த வலியுடைய கானவன் பரண்மீதிருந்து கள்ளை உண்டு மகிழ, கொடிச்சி, சந்தனக்

---

* குருவியோப்பியும் குன்றத்துச் சென்று வைகி யருவி யாடியுஞ் சுனை குடைந்து வருவேம். (சிலப்.)

§ குறுந்தொகை 150, 315.

§ பிணர்ச்சுவற் பன்றி தோன்முலைப் பிணவொடு
கணைக்கா லேனல் கைமிகக் கவர்தலிற்
கல்லத ரரும்புழை யல்கிக் கானவன்
வில்லிற் றந்த வெண்கோட் டேற்றைப்
புனையிருங் கதுப்பின் மனையோள் கெண்டிக்
குடிமுறை பகுக்கு நெடுமலை நாட. (நற். 336)

குழம்பைக் கரிய கூந்தலிடத்தே தடவி மெதுவாய் வருகின்ற காற்றிலே தழைத்த நீண்ட கூந்தலைக் கையினால் அசைத்து உலர்த்திப் பெரிய மலையின் பக்கத்தேயிருந்து குறிஞ்சிப் பண்பாடுவள். தினையை மேயவந்த இளைய வலிய களிறு தினைக்கதிரை உண்ணாதும், நின்ற இடத்தினின்றும் பெயராதும் உறங்காத பசிய கண்ணை மூடி உறங்கும். (அகம் 102) மலைச்சாரலிடத்தே மிளகு கொடி படர்ந்திருக்கும். பன்றி கொம்பினால் மண்ணெடுத்து உழுத புழுதியில் விதைத்த தினை விளைந்திருக்கும். தினையின் கதிரைப் புதிது உண்ணவேண்டிய கானவர், மரைப்பாலை, மான் இறைச்சியைப் புழுக்கிய பானையில் உலையாக வார்த்துத் தினை அரிசியைப் பெய்து சந்தன விறகால் உவித்த சோற்றை வாழையிலையிற் படைத்துப் பலரோடும் இருந்துண்பர். (புறம் 168)

## குறிஞ்சி நிலத் தோற்றம்

அழகிய அசைவில்லாத மலை, அளத்தற்கரிய தவமுடைய பெரியார் போன்றுநிற்கும். அழகிய பட்டாடை உடுத்தோரும், இனிய மழலைப் பேச்சுடையோரும், நாற்சந்தியிற் கூட்டமாக உலாவுவோரும் பலர் நட்பையுடையோருமாகிய அழகிய பரத்தையர்மனம் போல எல்லை அறியப்படாதாகி, அரிய பொருளுடைய நூல்களைக் கல்லாதவரின் உள்ளம் போல நொய்த நுரையைச் சுமந்து, மெய்யை விரும்பும் மேலோர் நட்புப் போல, அருவி, மலையிடத்தெப்பொழுதும் ஓடிக் கொண்டிருக்கும். பசியதாளுடைய தினைப் புனந்தோறும் பரண் மீது செருகிய சந்தனக் கட்டையும் அகிலுமாகிய கொள்ளிவிளக்கிற் கவரிமான் ஆறி நித்திரை செய்யும்.

தகர மரங்களால் அழகு பெற்ற குளிர்ந்த மலைச்சாரலில், நறை, நாகம், பலா, மா, சுரபுன்னை, ஈரப்பலா, செண்பகம், குருக்கத்தி, குறிஞ்சி, வேங்கை, ஆச்சா, சூரை, வள்ளி, மால், காந்தள், குரா, பனிச்சம், திலகம், மூங்கில், வெட்சி, காட்டு மல்லிகை, தில்லை, செங்கருங்காலி, சந்தனம், அகில், இலவங்கம், ஏலம், இருப்பை முதலிய மரங்களும் கொடிகளும் நெருங்கி வளரும். இவைக் கூடாகப் பாய்ந்து வருகின்ற ஆறு, தேன் கூட்டின் புறத்தை மறைத்து மலைச்சாரலிற் பரந்து பூங்காவனத்தின் தாதை அளைந்து மலை வாழ்குறச் சிறுமியர் ஆடுஞ் சுனையை நிறைக்கும். இவ்வகையான குறுங்காடுகளிற் குறவர் தேனெடுப்பர். பன்றி புனத்தை அழியாது காவல் புரியும் குறவர், பன்றிகள் கண்டு வெருண்டோடும்படி இருண்டுயர்ந்த வேலியிடத்துள்ள மரங்கள் தோறும் வைத்த வெளிச்சம் ஒளி செய்யும். கடையாமத்துச் சோலைகள் நாற்றமிகுந்த மலர்களை அலர்த்தும்.

(பெருங்கதை)

கானவர், நீர் உண்ணுதற்குத்திரியும் மான் கூட்டங்களிற் காற் சுவடு பதிந்த குளக்கரையிலுள்ள கிடங்குகளில் மறைந்திருந்து, நீருண்ணவரும், அகந்திப் பூப்போன்ற மருப்புடைய பன்றிகளை, நடு யாமத்தே வேட்டையாடுவர். பகற்காலத்தே தாமரைப் பூவின் புறவிதழ் போன்ற செவியுடைய முயல்கள் ஒன்றும் வெளியே போகாதபடி ஒன்றோடு ஒன்று தொடுத்த வலைகளை இழுத்துக்கட்டி ஆவென்ற வாயுடைய நாய்களுடன் சென்று பசிய பற்றைகளை அடித்து அவற்றை ஓட்டி வேட்டையாடுவர்.

(பெரும்பாண்)

## முல்லை நில மக்கள்

குறிஞ்சி நிலத்தே மக்கள் பெருகினர். மலையிடத்தே கிடைக்கும் உணவுப் பொருள்கள் அவர்களுக்குப் போதாமலிருந்தன. ஆகவே அவர்கள் மலைகளினின்றும் கீழே சென்று காடுகளில் வாழத் தொடங்கினர். அவ்விடத்து வாழ ஆரம்பித்தபோது அவர்கள் வாழ்க்கையில் ஓரடி முன்னுக்குச் சென்றனர். ஆடு மாடு எருமை முதலியவற்றையும், முன் தமக்கு வேட்டைக்குதவியாயிருந்த நாயையும் அவர்கள் வீடுகளில் வளர்த்து வந்தனர். இதனால் ஆடு மாடு முதலியவற்றை வளர்த்து அவை அளிக்கும் பயன்களில் வாழ்கின்ற நிலைமைக்கு வந்தனர். முல்லைநிலத்தில் ஆடுமாடு விரைவாகப் பெருகுவதற்குரிய வாய்ப்புண்டு. இதனால் ஒவ்வொருவரும் சொத்துடையவராயினர். ஆகவே அவர்கள் குடும்பங்களாகப் பிரிந்து வாழ்க்கை நடத்தினர். குறிஞ்சி நிலத்தே வாழ்ந்த காலத்து இயற்கை மணந்துக் குப்பின் புலிப்பற்றாலி அணிந்து தழை உடை அளித்தல் மணக்கிரியையா யிருந்தது. இப்பொழுது இயற்கை மணத்தின் முன் மைந்தரும் மகளிரும் மணவினை ஆற்றுதலாகிய கற்பு நிகழ்ந்தது. மாலைகளாலும் தழைகளாலும் அலங்கரித்த பந்தரின் கீழ் ஆண்களும் பெண்களுமாகிய சுற்றத்தினர் கூடி விருந்துண்டபின், ஆண் மக்களை ஈன்ற தாலி தரித்த நான்கு பெண்கள் மணமகளை முழுக்காட்டிப் புது ஆடை தரித்து அலங்கரித்து மணமகனுக்கு அளித்தல் அக்காலமணக்கிரியையாயிருந்தது. புரோகிதப்புரியும் சடங்குகள் பிற் காலத்து ஏற்பட்டன. இவ்வாறு திருமணங்கள் நடைபெற்றமையானும், எல்லோருக்கும் சொத்து இருந்தமையானும், ஆண்களே சொத்துக்குரிமை யுடையவராயினர். ஏராளமான ஆடு மாடுகளை வைத்திருக்கும் ஒரு குடும்

பத்தவர்களின் தந்தை செல்வத்தால் அடையக்கூடிய எல்லா முதன்மைகளையும் பெற்றான். நிலங்களைச் சிறு சிறு கூறுகளாகப் பிரித்தலினால் ஆடு மாடுகளை மேய்ப்பதற்குரிய வாய்ப்புக்கள் குறையும். ஆகவே பல குடும்பங்கள் ஒன்று சேர்ந்து வாழ்ந்தன. இவ்வகைப் பல குடும்பங்களுக்கு ஒருவன் தலைவனானான். ஆதியில் அரசன் தோன்றுவதற்கு இம்முறையே காரணமாயிருந்தது.

இடையனைக் குறிக்கும் கோன் என்னுஞ் சொல் அரசனைக் குறிக்கின்றது. மந்தைகளை மேய்க்கும் இடையனது கோலே அதிகாரத்துக்குரிய செங்கோலாயிற்று. மற்ற நாடுகளில் இடையர்கள் இடம் விட்டு இடம்திரியும் மக்களாயிருந்தனர். இந்திய நாட்டில் இடையர் ஓரிடத்திலேயே தங்கித் தமது வாழ்க்கையை நடத்தினர்.

காட்டிடத்தே மந்தைகள் பரந்துசென்று மேய, ஆயர் மர நிழலிற்றங்கி இருந்து குழல்களில் இனிய இராகங்களை ஊதுவர். அவர்களின் குழல்கள் மூங்கில், கொன்றைப் பழம் ஆதியவற்றாற் செய்யப்பட்டன. மாடுகளை மேயும்படி விட்டு நெடுநேரம் வேலையின்றி யிருப்பவர்களாதலின் ஆயர் குழலில் இனிய இசையைப் பாடுவதில் திறமையடைந்தனர். ஆயரில் ஒரு பிரிவினர் குறுகிய காலுடைய குறும்பாடுகளை வளர்த்து அவை கொடுக்கும் கம்பளியினால் ஆடை நெய்தனர். இவர் குறும்பர் என்றழைக்கப்பட்டனர்.

சிழ்க்கை அடித்தலால் மடித்தவாயுடைய கோவலர்குடியிருப்பில் சிறிய குரம்பைகள் காணப்பெறும். அவற்றின் கால்களிடத்து ஆடுகள் தின்பதற்குத் தழைகள் கட்டப்பட்டிருக்கும். அவற்றின் கதவுகள் பல தடிகளைக்கொண்டு கட்டப்பட்டன. முதிய இடையன் காவலாகப் படுத்துறங்

கும் படுக்கை தடிகளை வரிந்து, வரகு வைக்கோல் பரப்பி கிடாய்த் தோலாகிய பாய் விரிக்கப்பட்டுள்ளது. முற்றம் தாமணி தொடுத்த நெடிய கயிறுகள் கட்டிய குறிய முளை கள் அறையப் பெற்றன. ஊரைச் சுற்றி இடப்பட்ட வேலி யிடத்தே செம்மறியாடும் வெள்ளாடும் படுத்துறங்கும்.

தயிர் புள்ளியாகத் தெறித்த வாயுடைய மோர்ப்பானை யைப் பூவாற் செய்த சும்மாட்டின்மீது தலையிலே வைத்துக் குறிஞ்சி நிலத்தே போய்க் காலையிலே மோரை விற்கும், தாளுருவி அசையும் காதும், பணைத்த தோளும், ஆற்றின் கருமணல் போன்ற கூந்தலும், நல்ல § மாமை நிறமு முடைய ஆய்மகள், பட்சிகள் துயிலெழுகின்ற வைகறைக் காலத்தே எழுவாள். எழுந்து முடைக்காளானது வெள் ளிய முகைகளை ஒத்த குவிந்த முகிழ்களையுடைய இனிய தயிரைப், புலியினது முழக்கத்தையுடைய மத்தை ஆர வாரிக்கும்படி கயிற்றால் இழுத்துக் கடைவாள்: கடைந்த பின் வெண்ணெயை யெடுப்பாள். பின், மோருக்கு விலை யாகக் கிடைத்த நெல்லைக்கொண்டு சமைத்த உணவாற் சுற் றத்தாரை உண்ணும்படி செய்வாள். இவ்வகையான ஆய் மகள், தான் நெய்யை விற்றவிலைக்குக் கட்டியாகப் பசும் பொன்னை வாங்காளாய்ப் பாலெருமையையும், கரிய எருமை நாகினையும் நெய்க்கு ஒப்பாகச் சொல்லி வாங்குவாள்.

இடையர், செருப்பை விடாமற் கிடக்கும் காய்த்த காலினையுடையார்; பசுக்களுக்கு வருத்தஞ் செய்யும் தடி யூன்றியகையினர்: இரண்டு தலைகளிலும் உறியினையுடைய காக்களைச் சுமந்து செல்லுதலால் தழும்பு பிருந்ததுப்

---

* உதயணன் கதை.

§ நாருரித்த ஆம்பற்றண்டுபோன்ற நிறம்.

மயிருடையதுமாகிய தோளினையுடையர்; காட்டுமரங் களின் உயர்ந்த கிளைகளிலுள்ளவும் கொடிகளிலுள்ளவு மாகிய பல பூக்கள் கலந்து நெருங்கத் தொடுத்த மாலையினை அணிந்தோர்; ஓர் உடையினை யுடையர்; பாற்சோறாகிய உணவினர். இவ்வகையான ஆயர் பசுத்திரளோடே காட்டிற் றங்குவர், கங்கித் தீக்கடை கோலாற் கடைந்து கொண்ட நெருப்பினையுடைய தீக்கொள்ளியாற் றுளை யிட்ட கரிய துளையினையுடைய குழலிடத்தே பாலைப் பண்ணைப் பாடுவர். பாலைப் பண்பாடி வெறுத்தாராயின் குமிழின், உள்ளே துளையுடைய கொம்பில் வளைத்துக் கட்டின மரற்கயிற்றாற விரலாற் தெறித்து வாசிக்கும் நரம் பினையுடைய வில்லாகிய யாழில் குறிஞ்சி யென்னும் பண் பாடுவர்.

படைத்தலைவர் இருப்பதுப், விடத்தர் தொடரி முத லிய முள்மரங்கள் சூழ்ந்து வளர்ந்த வேலியுடையதுமாகிய ஊரிடத்தே, வீடுகளின் முற்றங்களில் பிடித்திரள் நின்றாற் போல வரகு முதலிய தானியங்கள் நிறைந்த குதிர்கள் நிற்கும். தலைவாயிலிடத்தே யானையினது காலை ஒக்கும் வரகுதிரிகைகள் நடப்பெற்றிருக்கும். வீடுகள், குறிய வண் டிச் சில்லுகளும கலப்பைகளும் சார்த்தி வைத்தலின்ற் தேய்ந்த சுவருடையவும், பகை சூழ்ந்தவுமாகிய கொட்டில்க ளுடையன. மாரிகாலத்து மேகத்தை ஒப்ப, வீடுகள் வரகு வைக்கோலினால் வேயப்பட்டுள்ளன. வரகையும் பருப்பையும் இட்டுச் சமைத்த பருப்புச் சோற்றினை ஆயர் உண்பர். * கோவலர் § கழுவோடே கறவைக் கலங்கள்

* பெரும்பாண.

கலித் தொகை § கழு—தடியின் இரண்டு தலைகளையும் சீவிக் கறத்தற்கரிய பசுக்களின் கழுத்திலிடப்படுவது.

வைத்து உறியோடு தோற்பையிடத்தே சூட்டுக் கோலையு மிட்டுச் சுருக்கிய பைகளைத் தூக்கி நீண்ட கொன்றைக் காயைப் பிளந்து செய்த குழலில் இனிய இசையைப் பாடித் தமது பசுக்களை மழை பெய்த நிலத்தே மேய்க்கக் கொண்டு செலவர். மாடுகளை மேய்க்கச் செல்லும் இடையர் மூங்கிற் குழாய்களில் உணவை இட்டு மாட்டின் கழுத்திற் கட்டிச் செல்வர் (அகம் 303); முதுகிலே இட்ட பறிகளில் குழை களை உருவிப்போட்டுச் செல்வர்.

காந்தள் மாலைபணிந்த கோவலர், ஏற்றையுடைய ஆடு மாடு எருமை முதலிய கூட்டங்களை மேயவிட்டு, பற்கொட் டும்படி நடுங்குகின்ற குளிர் வருத்தத் தீரக் கையிடத்துள்ள கொள்ளியிடத்தே கையைக் காய்ச்சி அதனற் கொண்ட வெம்மையைக் கன்னத்தே தடவுவர். (நெடுநல்வாடை)

முல்லை நிலத்திலுள்ளவர்கள் தஞ் சிறுமியரை ஏறு தழுவி வீரச் செயல் காண்பிக்கும் காளையருக்கு அளிப் பதும் வழக்கமாயிருந்தது. கூரிய கொம்புடைய கொழுத்த எருதை அவிழ்த்துவிட அதனைப் பிடித்து ஒருவன் அடக்கு தலே ஏறு தழுவுதலாம். ஏறு தழுவுங்கால் எருதுகள், பல இளைஞரின் குடலைக் கூர்ய கொம்புகளாற் பிளந்து கொல்லுவதும் உண்டு. ஏறு தழுவும் காட்சியைப் பற்றிய செய்யுட்கள் பல, கலித்தொகையிற் காணப்படுகின்றன.

“மகட் கொடை நேர்ந்த ஆயர் சேரக் கூடி இறைவ னுடைய குந்தாலிப் படைபோலே கூரிதாகக் கொம்புகளைச் சீவி ஏறுகளைத் தொழுவிடத்தே புகுத்திவிட்டார்.

அவ்விடத்து ஏறுகளைத் தழுவிப் போக்கும் படியை உட்கொண்டு வந்து வந்து திரண்டு மழை முழக்கமும் இடி யும் போல ஆரவாரமெழப் புகையொடு தூகள் எழ ஏறு தழுவினர்க்குக் கொடுத்தற்கு நல்ல மகளிர் திரண்டு நிற்ப

நீர்த்துறையிலும், ஆலமரத்தின் கீழும் பழைய வலியினை யுடைய மராமரத்தின் கீழும், உறையுந் தெய்வங்கட்குச் செய்யும் முறைமைகளைத் தழுவித் தொழுவிலே பாய்ந்தார்.

எருத்தினது நோக்கை அஞ்சாஞய் அதின் மேலே பாய்ந்த இடையனை அவ் வெருது சாவக் குத்திக் கொம் பிடத்தே எடுத்துக் கொண்டு உடலைக்குலைக்கின்ற தோற்றம்; துரோபதையின் துய்ய கூந்தலிலே கையை நீட்டிய துச்சாதனனுடைய நெஞ்சைப் பிளந்து பகைவர் நடுவே தான் சொன்ன வஞ்சினத்தை வாய்க்கச் செய்த வீமசேனனைப் போன்றது.

"அங்ஙனம் பாய்ந்து கொம்பிடத்தே பிடித்துக் கொண்டும் மார்பிலே உறும்படி தழுவிக்கொண்டும் கழுத் திடத்தே அடங்கிக்கிடந்தும் இமில் முறியும்படி தழுவியுந் தோளுக்கு நடுவே கழுத்தைப் புகுதவிட்டுப் பிடித்தும், நெருங்கிக் கொம்புகள் தம்மேலே படுதலை மாற்றிக்கொண் டும், நிரைத்துத் தம்மேலே சென்ற ஆயரைப் பின்னர்க் கீழே வீழ்த்து, நீண்டமருப்புத் தைக்கும்படி குத்தி, அவர் கள் தழுவுகின்ற கழுத்திடத்தைத் தழுவக்கொடாதே ஏறு கள் அவரை நீக்கி நிறுத்தின; அங்ஙனம் நிறுத்தினபின் புஞ் சென்று தழுவுவாரைக் கோட்டிடத்தே சாம்படி குத்திப் பின்சென்று தழுவுவாரைப் பெறுமல் நின்ற நிறத்தையுடைய சிவந்த ஏறு, உயிர் குறைகின்ற நாளி டத்தே அவர் பின்னே சென்று குற்றத்தைச் செய்து துகைத்து உயிரையுண்ணும் கூற்றுவனைப் போன்றது.

"கோபத்தோடே வெவ்விதாயத் தன்மேலே சென்ற சிவந்த ஏற்றைச் செவியடியிற் கொம்புகளைப் பிடித்துக் கொண்டு காயாம்பூமாலைஅணிந்த பொதுவன் தழுவினுன்"*

* கலி.

## முல்லை நிலத் தோற்றம்

" பொருள் வயிற் பிரிந்தாரை எதிர் ஏற்கும் கற்புடை மாதரைப் போலச் சடுதியாக முழங்கிக் கடல் சூழ்ந்த உலகம் முழுவதும் மகிழ முகிற்கூட்டங்கள் பருவகாலத்தே மழை பெய்தன. கார்காலம், பெரிய கடலிடத்தே நீரை யுண்ட முகிலாகிய விதானத்தைக்கட்டி, இந்திர வில்லாகிய தூணை அழகு பெற நாட்டி, விளங்குகின்ற மின்னலாகிய விளக்கை மாட்டி, ஆலங்கட்டியாகிய வெண்மணலை அழகு பெறத்தூவி, அழகிய முழக்கத்தை முரசு போல் அதிர்த்து, பெரிய தண்ணியதுளிகளைச் சொரிந்து, வேனிலைத் தாங்கு தலால் மேனி வாடிய பூமியை முழுக்காட்டும். இவ்வி டத்தே பலரும் விரும்பும் படி தொலைவிற் பொருள் தேடப் பிரிந்து பொன்னு பரணங்க ளாகிய செல்வத்தோடு இருட் காலத்தே வந்த இனிய உயிர்க்காதலனை அடைந்த ஆபரண மணிந்த பெண்கள் இடை போலப் பெரிய அழகிய கொடி களை அயலே பரப்பி அப்பெண்களின் பற்கள் போல முல்லை அரும்புகளைப் பரப்பினின்றன. அவற்றினயலே குரவும் தள வும் குருந்தும் வெண்காந்தளும் அரவின் பல்லுப் போல அரும்பின. அவை அவிழ்கின்ற பதம் பார்த்து வண்டுகள் ஊதின. இவ்வாறு கார்காலத்தே அழகு பெற்ற கானம், அழகிய எல்லையை யுடையனவாகி உறங்குகின்ற விசாலித் தகை ஒருங்கே நிரைத்தன போல் வளைந்த கதிருடைய தினையும் சோளமு முடையனவாயிருக்கும் கவைத்தகதி ருடைய வரகும் கார் எள்ளும், புகர் நிறப்பூவுடைய அவ ரையும் தொங்குகின்ற குலையுடைய பயறும் உழுந்தும் கொள்ளும் கொழுந்துடைய துவரையும் தோரை நெல்லும் பிறவும் அளவிடப்படாமல் விளைந்திருக்கும். உயர்ந்த மலை யின் அருகாமையில் பெண்மரையா பால் சுரந்து ஒழுக்கி

'வெள்ளிய பூவுடைய முசுண்டையின் பசிய குழையை மேயும். சிறிய பெண்மானைத் தழுவிய முறுகிய மருப்புடைய ஆண்மான், செறிந்த இலைபுடைய காயாகதுப்பின் ஒரு பக்கத்தே உறைக்கப் பெரிய கொன்றை யோடு பிடாவின் தலை பின்னி மலர்ந்த பூவுடைய முல்லை நிலத்திற் பகற்காலத் திற்றுயிலும் வரியுடைய தாரும் விரிந்த புள்ளியுமுடைய மான் கூட்டம் ஆட்டுக் கூட்டத்தோடு விளையாடும். பூங்கொத்துகளுடைய சோலையும், நல்ல சிறந்த பண்டங்களோடு பலர்கூடி நகரத்தாருக்கு விற்கும் தோற்றமும், பல ஆக்களின் பாலைப் பெறுகின்ற வாழ்க்கையும் உடைய கோவலர் முல்லை நிலத்திற் கூடியிருப்பார்.'' (பெருங்கதை)

## மருதநில மக்கள்

கடற்கரைக்கும் முல்லை நிலத்துக்கும் இடையே கிடக்கும் நிலம் வயல்களா யிருந்தன. பழைய கற் காலத்துக்குப் பின் அங்கு வாழை நெல் கரும்பு முதலிய பயிர்கள் உண்டாக்கப்பட்டன. இவ்விடத்தில் மனிதன் நிலத்தை உழுது தானியங்களை உண்டாக்கவும், ஆறுகளிலிருந்து வயல்களுக்கு நீர்ப்பாய்ச்சவும் பழகிக்கொண்டான். வெள்ளத்தை இவ்வகையாக ஆண்டமையின் இவனுக்கு வேளாளன் என்னும் பெயர் எற்பட்டது. ஆறுகளுக்குத் தூரத்தே இருந்த மனிதன் மழை நீரைக் குளங்களிற் றேக்கி, வாய்க்கால் வழியாகப் பயிர்களுக்குப் பாய்ச்சவும் கிணறுகள், நீரூற்றுகளி லிருந்து நீரை உபயோகிக்கவும் கற்றுக் கொண்டான். இவ்வாறு காரை ஆண்டமையின் இவன் காராளன் எனப்பட்டான்.

இப்பருவத்தில் மனிதன் மரந்தடிகளால் வீடுகள் அமைத்து அவற்றுள் தானியங்களைச் சேமித்து வைத்தான்.

உபயோகத்துக்கு மீதியான விளை பொருள்களைக் கடல்மீன் உப்பு முதலியவற்றுக்குப் பரதவரோடும், பால் நெய் முதலியவற்றுக்கு ஆயரோடும், கல்லாயுதம், மான் கொம்பு சந்தம் இறைச்சி முதலியவற்றுக்குக் குறவரோடும் பண்டமாற்றுச் செய்தல் அவர்க்கு இலேசாயிருந்தது. பண்டங்களைப் பிறவிடங்களுக்குக் கொண்டு செல்ல வேண்டியிருந்தமையின் மனிதன் வண்டி செய்யப் பழகிக் கொண்டான். மனிதனுடைய நாகரிகம் படிப் படியாக வளர்ச்சியுற்று மருத நிலத்தில் முடிவடைந்தது.

"பசிய கண்ணுடைய எருமை கன்றை நினைந்து பசிய இலையிடத்து இரங்கிச் சொரிந்த பாலின் நிறமுடைய அன்னமும் நாரையும் அதன் குஞ்சுகளும் வயலிடத்துள்ள ஆரவாரத்துக்கஞ்சி எழும். கரும் பிடத்திற் றூங்கும் தேன் கூட்டினின்றும் தேன் அலர்ந்த செந்தாமரை மலர் மீது சொட்டும். இத்தோற்றம், அந்தணர் மூட்டுவதற்கு நெருப்பின் மீது நெய் சொரிந்ததை ஒக்கும். இவ்வகையான சோலைகளில் பாளைகளும் பழுத்த குலைகளுமுடைய கமுகும், மூங்கிலும், வாழையும், குலைகளுடைய தெங்கும், பலாவும், குருந்தும், மாவும், புன்னையும், செருந்தியும், பொன் போன்ற பூங்கொத்துகளுடைய புலிநகக் கொன்றையும், இவை போன்ற பிறவும் இடைவெளியின்றி உண்டாக்கப் பட்டிருந்தமையின் சூரியனது கிரணங்கள் உள்ளே நுழைய முடியாமையினால் பகற் காலத்தும் சோலைகளின் அகத்தே இருள் செறிந்திருக்கும். வயல்களில் தாளிற் படிந்த கனத்த கதிருடைய நெல் வரம்பிற் சாய்ந்துகிடக்கும். பெரிய எருதுகளைக் கொண்டு உழும் உழவரின் ஒலியும், வயலில் வேலை செய்யும் கூலி ஆட்களின் ஆரவாரமும், வயல்களின் இடை யிடையே களை பிடுங்கும், பசிய இலைகளிற் கள்ளை வார்த்துப் பருகிய கடைசியரது பாடலும், கிளிகளின்

பாடல்களும், மத்தளத்தின் ஒலியும், கிணைப்பறையின் ஆரவாரமும், மார்ச்சனையுடைய முழவின் ஆர்ப்பும், மடைகளின் வாய்களைத் திருத்தும் மள்ளரின் ஒலியும் இடையீடின்றி எழும். (உதயணன் கதை)

உழவர் நுகத்திலே எருதுகளைப் பூட்டிப் பெண் யானையின் வாயை ஒத்த வளைந்த வாயுடைய கலப்பையின் உடும்பின் முகத்தை ஒத்த பெரிய கொழு மறையும்படி அமுக்கி உழுது விதைகளை விதைப்பர். பயிர்கள் விளைந்து அறுக்கும் பருவத்தை அடைந்தபோது அவற்றுட் டங்கும் குறுகிய காலினையும் கரிய கழுத்தினையு முடைய காடை பறக்கலாற்றாதனவும் கடம்பின் பூப்போன்ற நிறமுடையனவுமாகிய குஞ்சுகளைக் கூட்டிக்கொண்டு காட்டிடத்தே சென்று தங்கும்.

கொல்லனது முறிந்த குறட்டினை ஒத்த காலையுடைய நண்டின் புற்றுச் சிதையும்படி கோரைப் புல்லைக் குத்தி எடுத்த மண் கிடக்கின்ற கொம்புடைய கரிய எருதுகள் பெரிய வயல்களிடத்தே நின்று போர் செய்யும். அதனைச் சேர்ந்த நிலத்தை ஒக்க மிதித்து உழவர் நாற்று முடிகளை நடுவர். வயல்களிற் களை பறிப்போர் நெய்தற் பூவைச் சூடி வெறுத்தாராயின் முள்ளியின் பூவைப் பறித்துக் கோரைப் புல்லின் தண்டைப் பல்லாற் கிழித்து முடிந்த நாராற் கட்டிய மாலையை, ஈருடைய கரிய தலை நிறையும்படி சூடுவர்; சண்பினது காயிடத்தே உள்ள பொன்போன்ற தாதை மார்பிடத்தே பூசுவர். இரும்புத் தகடுபோன்று திரையாத மெல்லிய தோலினையுடைய வேலைசெய்வோரின் பிள்ளைகள் பழஞ் சோற்றின் திரளையை வெறுத்து வரம்பிடத்துக் கட்டிய புதிய வைக்கோலால் வேய்ந்த கவிந்த குடில்களின் முற்றத்தே அவலிடிப்பர். அவ்வோசையைக் கேட்ட கிளி

கள் அஞ்சிப் பறக்கும். இவ்வாறு இடையறாத புது வரு வாயினையுடையதும் விளைந்த கதிர்களையுடையதுமாகிய கழனியிடத்துக் குளவிக் கூட்டத்தை ஒத்த முற்றின நெல்லுடைய தாள்களை அறுத்துத் தொழிலாளர், பாம்புறை கின்ற மருதின் நிழலிற் போரடுக்குவர். துணங்கையாடும் பேய்க் கூட்டம் வெண்டுகில் உடுத்து நின்றது போலச் சிலந்தியின் வலைகள் போரைச் சூழ்ந்து கிடக்கும். அப்போர் களைக்கடா விட்ட பின்னர் வைக்கோலையும் கூளங்களையும் பிரித்து ஈரம் புலரும்படி விட்டு மேல் காற்றிலே கையாற் றூவித் தூற்றின பொலி மேருவைப்போற் றோன்றும்.

மருத நிலஞ் சூழ்ந்த குடியிருப்புகளிற் பசுக்கன்று களைப் பிணிக்கும் தாம்புகள் கட்டின தறிகள் நட்ட பக்கத்தினையும், நீண்ட ஏணிக்கும் எட்டாத உயரமும், தலைபைத் திறந்து உள்ளே கொட்டப்பட்ட நெல்லினையுமுடைய பழைய குதிர்களையுமுடைய வீடுகளில், தச்சச் சிறார் செய்த விளையாட்டுத் தேர்களை உருட்டிக் கொண்டு திரிந்த பிள்ளைகள், தமது தளர் நடையாலுண்டான வருத்தம் தம்மை விட்டு நீங்கும்படி செவிலித்தாயிடத்துப் பாலை யுண்டு அவர்களைத் தழுவிக்கொண்டு உறங்குவர். அங்குள்ளார் நெற் சோற்றோடு கோழிப் பேட்டின் இறைச்சிப் பொரியலை உண்பர். யானையின் குரல் போலச் சத்தமிடும் ஆலைகளிற் கருப்பஞ் சாற்றைக் கட்டியாகக் காய்ச்சுவர். (பெரும்பாண்.)

அகன்ற கழனியிடத்தே பசிய கரும்பின் பாகைக் காய்ச்சுகின்ற கொட்டிலில் நெருப்பின் புகை சுடுதலால் வயலிடத்துள்ள நெய்தற் பூ வாடியிருக்கும். காய்ந்த நெற் கதிரைத் தின்ற எருமைக் கன்றுகள் உயர்ந்த குதிரைகளின் பக்கத்தே படுத்துறங்கும். குலையுடைய தெங்கும், குலை

-யுடைய வாழையும், காயுடைய கமுகும், மணம் வீசும் மஞ்சளும் மாமரங்களும், நுங்குடைய பனையும், அடிபரந்த சேம்பும், முளைத்த இஞ்சியும் அக்கழனியிடத்தே செறிந்து தோன்றும். ஒள்ளிய நெற்றியுடைய மகளிர் உலருகின்ற நெல்லைத் தின்னும் கோழியை எறிந்த, பொன்னாற் செய்த மகரக்குழை, பூண் அணிந்தசிறார் மனையின் முற்றத்தே கையாலுருட்டும் மூன்றுருளையுடைய சிறு தேரினது உருளைத் தடுக்கும். (நெடுநல்வாடை)

"நெருப்பு எரிவது போன்ற தாமரையை இடையிடையே சேர்த்து அரிந்து குவித்த செந்நெல் அறுக்கும் வேலையாட்கள் கள்ளை அருந்தி, வண்டிச் சில்லுச் சேற்றுட் புதைந்ததாயின் சகடம் செல்லுதற்குக் கரும்புகளைத் தெரிந்தெடுக்குமூரன். (அகம் 116)

ஆரவாரமுடைய விடியற்காலத்து ஆட்களை அழைத்து அரவஞ் செய்யும் உழவரது தாற்றுத பொலியினின்று எழுந்த நொய்த கூளங்கள் வானத்தை இருண்ட மேகம் போல் மறைக்க, இருள் புலர்கின்ற விடியற்காலத்து வைக்கோலைப் பெயர்த்து அலைத்துக் கடாவிட்டுத் தொழிற் செருக்கால் நேர்ந்த சோர்வு நீங்கும்படி, காற்றடிக்கப் பூத்த வளவிய தளிருடைய மாவின் கிளிபோன்ற காய்க் கொத்துக்களைப் பிழிந்து, மாதுளங்காய் முதலியன சேர்த்துப் புளிக்கும் செவ்வி உண்டாகச்செய்து புதுக்குடங்களில் நிறைத்து வைத்த சாரத்தை வெய்யிலிலே வாடப் போட்ட பனையோலையாற்கோலிய தட்டுப் பிழாவில்வார்த்து மடுவில் மாடு நீர் குடிப்பதுபோற் களமர் குடிப்பர்; குடித்துக், கொள்ளும் பயறும் கலந்து பால் விட்டுச் சமைத்து வெள்ளிக் கோல் வரைந்தது போற் தோன்றும் வெள்ளிய கூழை வேண்டிய மட்டும் உண்டபின் நெற்குவியலைச் சூடா

கர் சுற்றிப் பொழுது சரிய மருதின் நிழலில் எருதுகளோடு தங்குவர். (அகநானூறு)

கடைசியர் காலையில் முடியிடத்தேவைத்து முடிந்த பூக்களைக்களைவர். களைந்து தலையிடத்தே நாற்று முடிகளைச் சுமந்து வயல்களுக்குச் செல்வர்; சென்று கள்ளை உண்டு களித்துப் பண்ணோடு பாடுவர். செந்நெற் கதிரோடு அறுகும் குவளையும் கலந்து தொடுத்த மாலையை மேழியிற் சூட்டி ஏர்பூட்டி உழுவோர், ஏர் மங்கலம் பாடுவர். நெல்லை அரிந்தோர் சூட்டைக் கடாவிட்டு முகவைப் பாட்டைப் பாடுவர். கிணைப் பொருநர் தெளிந்த ஓசையுடைய கிணைப்பறையைக் கொட்டுவர். உழவர், இரப்பவர் சுற்றத்தையும், புரப்பவர் சுற்றத்தையும் உழவிடத்தே விளைப்பர். (சிலப்.)

வயலிடத்து பயில் உதிர்த்த இறகை உழவர் சூட்டோடு திரட்டும் வயல்களையும் கொழுவிய மீனையும் மிக்க கள்ளையு முடையோன். (புறம் 13)

விளைந்த வயல்களில் விழும் புள்ளை ஓட்டுவார் பனங்கருக்காகிய விறகால் மீனைச் சுட்டு மது வருந்துவர். (புறம் 29)

## மருதநிலத்திலுள்ள பாணர் குடியிருப்பு

வலை வீசுவோர், வஞ்சிமரமும் காஞ்சிமரமுமாகிய வெள்ளிய கொம்புகளைக் கைகளுக்கு நடுவே கலந்து வைத்து மூங்கிற்கோலை வரிச்சாக நிரைத்துத் தாழை நாராற் கட்டித் தருப்பைப் புல்லால் வேய்ந்த குறுகிய இறப்பையுடைய குடில்களில் வசிப்பர். முற்றங்களில் மீனை வாரி எடுக்கும் பறிகள் கிடக்கும். புன்னைக் கொம்பர்களை வெட்டி இடப்பட்டதும், மேலே படர்ந்த சுரையின் காய்கள் தூங்கப் பெறுவதும் மணல் பரப்பியுள்ளதுமாகிய பந்தரின் கீழே

இளையோரும் முதியோரும் கூடியிருப்பார்; பின் கயலும் இறாலும் பிறழும் ஆழ்ந்த குளங்களைக் கலக்கி மீன் பிடிப்பார். வளைந்த குடுமியுடைய வலைவீசும் இவர்கள் கோடைகாலத்தும் வற்றுதலறியாத குளங்களில் கரையைக் காத்திருப்பர்.

அவர்கள், குற்றாத கொழிய வரிசியைக் கழியாகத் துழாவிக் காய்ச்சிய கூழை அகன்ற வாயையுடைய தட்டுப் பிழாவிலே உலரவாற்றிப் புற்றும் பழஞ்சோற்றை ஒத்த புறமுடைய நென் முளையை இடித்துச்சேர அதிலே கலந்து இனிமை பிறக்கும்படி இரண்டு பகலும் இரண்டு இரவும் அரியாமல் வைத்துச் சாடியின் கண்ணே முற்றின வெவ்விய நறிய கள்ளை மீன் சூட்டோடு அருந்துவர்.

தூண்டிலிற் கோகக்கும் இரையிட்டு வைக்கும் தோற்றையையுடையமீனைத் தப்பாமற் பிடிக்கும் பாண்சாதியினன் மூங்கிற் கோலின் தலையிற கட்டின கயிற்றிடத்தே தூண்டிலைக் கொளுவி அது மறையப்பொதிந்த இரையைக் கவர்ந்து அகப்படாதுபோன வாளைமீன், நீர்க்கணித்தாய் நின்ற பிரம்பினது காற்றுலசையும் நிழலை நீரிற் கண்டஞ்சும். குளத்திலே தாமரையையும் இந்திர வில்லை ஒத்த நிறமுடைய மலர்களும் மலரும். (அகம்.)

## நெய்தல் நில மக்கள்

முல்லை நிலத்துக்கு அடுத்தபடியாக நெய்தல் நிலம் குடியேறப்பெற்றது. விசாலித்த நெஞ்சும் வலிமையுமுள்ள நெய்தல்நிலமக்கள் கடலிடத்தே படகுகளிற்சென்று மீன் பிடித்தனர். இரண்டொரு மரங்கள் ஒருமிக்கப் பிணைக்கப்பட்ட கட்டு மரங்களே அவர்களது முற் பருவத்துப் படகுகளாயிருந்தன. இந்நிலத்து மீனும் உப்பும் மிகு

தியாகக் கிடைத்தன. இவற்றைப் பரதவர் மற்ற நிலங்களுக்குக் கொண்டு சென்று பிற பொருள்களுக்குப் பண்டமாற்றுச் செய்தனர். இதனால் அங்குள்ளார் பெரும்பாலும் வியாபாரத்தை மேற்கொள்ளவேண்டியவராயினர். இவர்கள் பொதி மாடுகளிற் பண்டங்களை ஏற்றிச் சென்றனர். இப்பரதவரிலிருந்தே மேற்கே ஆபிரிக்கா அரேபியேமுதலிய விடங்களுக்கும், கிழக்கே மலேயா சீனு முதலிய இடங்களுக்கும் பண்டங்களை நாவாய்களில் ஏற்றிக்கொண்டு சென்று வியாபாரஞ் செய்த மாலுமிகள் தோன்றினா.

பரதவர் கடலிற் பிடித்த இறாலைச் சுட்டுத் தின்பர்; வயல் ஆமைகளைப் புழுக்கி உண்பர்: மணலிடத்தே படர்ந்த அடம்பின் பூவைத் தொடுத்துத் தலையிற் கட்டுவர்; நீரில் நிற்கும் ஆம்பற் பூவைப் பறித்துச் சூடுவர்; ஆட்டுக் கிடாய்களையும் கவுதாரிகளையும் பொருது விளையாடுதற்குக் கொண்டு சென்று அகன்ற மன்றிடத்தே கூடுவர்.

நிறைபுவா நாளிலே சிவந்த தலையுடைய பரதவர் மீன் பிடித்தற்குப் போகாது தழையுடுத்த கரிய தம்மகளிரோடு திரளுவர்; திரண்டு நெடிய தூண்டிற் கோல்கள் சார்த்தியிருக்கும் குறுகிய இறப்புடைய கடற்கரைக் குடியிருப்பின் நடுவில் நிலவு சேர்ந்த இருளைப் போலவலை கிடந்து உலரும் மணலுடைய மனையின் முற்றத்தில் சினையுடைய சுறாவின் கொம்பை நடுவர். நட்டு அதனிடத்து ஏறிய வலிய தெய்வங் காரணமாக, விழுதுடைய தாழையின் அடியிடத்தே நின்ற வெண்டாளியின் பூவை அணிவர்; தாழையின் மலரைச் சூடுவர்; பனையின் கள்ளை உண்டு ஆடுவர். பின் கடலாடியும் உப்புப் போக ஆற்று நீரிலே குளித்தும், நண்டுகளை ஆட்டியும், திரையிலே விளையாடியும், பாவைகளைப் பண்ணியும் பகற் பொழுதைக் கழிப்பர்.

கடலருகே இருக்கும் பரதவருடைய அகன்ற தெருவிடத்தே அரிய காவலையுடைய பண்டசாலையுண்டு. பண்டசாலையிற்றிரண்டு கடலில் ஏற்றிதற்குக் கொண்டுவந்த பண்டங்களும், கடலிலிருந்து இறக்கிய பண்டங்களும், சுங்கங் கொள்வதற்கு முத்திரை பொறித்துப் பண்டசாலைக் குப் புறம்பே அடுக்கப்பட்ட பண்டங்களும் மலை போற் குவிந்து கிடக்கும். சுங்கங் கொள்வோர் எப்பொழுதும் ஓய்வின்றிச் சுங்கங் கொள்வர். பண்டசாலையின் முற்றத்தே ஆண்நாய் மேழகக்கிடாயோடு ஏறடைகளிலேறிக் குதித்து விளையாடும். (பட்டினப்பாலை)

வானை முட்டும் மாடத்திலுள்ள பரதவர்மகளிர் அரை யிடத்தே உடுத்த மெல்லிய துகிலையைத் தோகைமயில் களைப் போலக் காலிடத்தனவாகிய சிலம்புகள் ஒலிக்க நூலால் வரிந்த பந்துகளை அடித்து விளையாடுவர். பின், முத்தை ஒத்த வார்ந்த மணலிலே கையிற் புனைந்த வளையல் கள் அசையப் பொன்னாற் செய்த கழங்கைக் கொண்டு மெத்தென விளையாடுவர்.

ஆகாயத்தே திரிகின்ற தேவருலகுக்கு முட்டுக் காலாக ஊன்றிவைத்த ஒரு பற்றுக் கோடுபோல விண்ணைத்தீண்டும் வெளிச்ச வீடு, ஏணி சாத்தி ஏறுதற்கு அரியதும் தென்னங் கிடுகு முதலிய வற்றால் வேயாது சாந்திட்டு மூடப்பட்ட தாயும், இராக்காலத்தே கொளுத்திய விளக்கு விளக்கின்ற தாயும் இருக்கும். கடலிடத்தே செல்வோர் இக்கலங் கரை விளக்கத்தைக் கண்டு, துறைமுகத்தை அறிந்து தங்கு வர். தென்னங் கீற்றுகளால் வேய்ந்த மலைபோன்ற தனி வீடுகள் காணப்படும். முற்றங்களில் மஞ்சட்செடிகளும்பூஞ் செடிகளும் வளரும். அங்குள்ளோர் பலாப்பழத்தையும் இள நீரையும் வாழைப் பழத்தையும் நுங்கையும் வள்ளிக் கிழங்கையும் நுகர்வர். (பெரும்பாண்)

உமணர் பாத்திகளிலே கடல் நீரை விட்டுப் பளிங்கு போன்ற உப்பை விளைவிப்பர். விளைந்த உப்பைப் குவியல் குவியலாக வாரிக் குவிப்பர். இங்ஙனம் குவிக்கப்பட்ட உப்பைச் சகடங்களில் ஏற்றிச் சென்று முல்லை குறிஞ்சி மருதம் முதலிய நில மக்களுக்குவிற்பர். இவ்வாறு செல்லும் உமணச் சாத்தர் செலவு சங்க நூல்களுள் அழகாகச் சொல்லப்படுகின்றது.

உமணர், தொத்துளிப்பாயால் வேய்ந்த வட்டமான கூடார முடைய வண்டிகளில் உப்பை ஏற்றிச் செல்வர். வண்டியின் முன் புறத்தே கோழிக்கூடுகள் கிடக்கும். மேலே கூடாரத்தில் உரல்போன்ற உறியில் புளியங்காய் நெல்லிக் காய் முதலியன ஊற விட்ட காடிப்பானை தூங்கும். வேப்பிலையைக் குழந்தைக்குக் காவலாகக் கையிடத்தே வைத்திருப்பவளும், குழந்தையைக் கைக் கொண்டவளு மாகிய உமணப் பெண் எருத்தை முதுகிலே அடித்து ஓட்டு வாள். தழையாற் கட்டின மாலையும் பெரிய வலிய இறங்கின தோளும் முறுக்குண்ட உடம்பு முடைய உமணர், சிறிய துளையையுடைய நுகத்தில் பெரிய கயிற்றாலே எருதுகளை ஒருமுகப்பட நிரைத்துக்கட்டி இளைத்தாற் பூட்டுதற்குப் பல எருதுகளைக்கொண்டு பக்கத்தே செல்வர். செல்லு மிடத்து உப்பின் விலையைக் கூறுவர். (பெரும்பாண்)

உவர் நிலத்தே விளைந்த உப்பின் விலையைக் கூறிப் புழுதியுடைய வழியால் தொலைவிடத்தே செல்லும், கையி டத்திற் கோலுடைய உமணர், கூட்டமாகச் செல்வர். சென்று வளைந்து சுருண்ட கொண்டை அசையவும் அரை யிற் கட்டிய பல குழைகளாலான உடை தளரவும், நெல் லுக்குப் பதில் உப்புக் கொள்ளீரோ எனச் சேரிகள்தோறும் நுவலுவர். (அகம் 390)

"உயர்ந்த திரையுடைய கடற்பரப்பிற் திமிலோன் தூண்டிலிற்பிடித்த மீனை, தழையுடையுடைய பெண்கள் விழாக்கொண்டாடும் வீதியின் விலைபகரும் கடற்கரைச் சிறுகுடியி லுள்ளவன்" (அகம் 320.)

பொழுது படத்திரையிடத்தே விளையாடி அசைகின்ற கிரைத்த வளையணிந்த கூட்டத்தாரோடு உப்பின் குவியல் மீதேறி வருகின்ற திமிலை எண்ணும் துறைவன்." (அகம் 190)

பெரிய கடலிடையில் மீன்பிடிக்கும் சிறுகுடியிலுள்ள பரதவர் கரிய கடற்கரைவயலிடத்து, உழாது செய்த வெள்ளிய கறபோன்ற உப்பின் விலையைக்கூறி மலைநாட்டுக்குச் செல்லும் கோலைக் கையிலுடைய உமணரின் காதன் மடமகள், வளையல் ஒலிக்கும்படி கைவீசி நெல்லுக்குப் பதில் உப்பெனச் சேரியிடத்தே விலைகூறுதலின், வீட்டிற் கிடந்த நாய், சத்தத்தைக்கேட்டுக் குரைப்ப அதற்கு அஞ்சினள். (அகம் 140)

"பெரிய கடலினின்றும் எம் தந்தை கொணர்ந்த கொழுத்தமீன் கருவாட்டைக் கவரும் புட்களை மணலுடைய புன்னை நிழலிலிருந்து ஒப்பியும் சிவந்த நண்டின் ஒடுங்கிய வளையைக் கிண்டியும், ஞாழல் மரத்தின் உயர்ந்த கொம்பிலும், கழியிடத்துள்ள வளைந்த தாழையிலும் பிணித்த ஊசல் ஆடியும், கீழ்காற்று மணலைக் கொணர்ந்து குவிக்கின்ற கடல்முகத்தே ஆயத்தோடே வெள்ளிய திரையுடைய கடலாடியும், அழகிய பூவோடுகூடிய தகாழையுடுத்தும் அணித்தேயுள்ள பலவகைப் பூக்களுடைய சோலையில் வருதலாகிய கௌவையை, பேயுடைய இவ்வூரிடத்துக் கொடியவற்றை அறிந்து கூறும் பெண்டிர் சொல்லக்கேட்டு அன்னை நின்னைக் காவல்கொண்டாள். (அகநானூறு)

"புலவுமீன் வெள்ளுணங்கற் புள்ளோப்பிக் கண்டார்க்
கவலநோய் செய்யு மணங்கிதுவோ காணீர்."
"கடல்புக்குயிர் கொன்று வாழ்வர் நின்னையர்"
ஒடுந்திமில் கொண்டுயிர் கொல்வர் நின்னையர்"
கள்வாய் நீலங் கையிலேந்தி
புள்வாயுணங்கற் கடிவாள்" (சிலப்பதிகாரம்)

## பாலை நில மக்கள்

பாலை நிலம் மனிதன் குடியேறி வாழ்தற் கேற்ற வாய்ப்புடையதன்று. மிருகங்களை வேட்டையாடத் துரத்திச் செல்லும் எயினர் அவ்விடத்திற் சில காலந் தங்குவதுண்டு அவர் கொடிய நெஞ்சுடையவர்; பாலை நில வழியே செல்வோரை வழிபறித்துண்ணும் வாழ்க்கையுடையவர். அவர்கள் முல்லை நில ஓதுக்குகளிலும் குறிஞ்சி நில ஓதுக்குகளிலும் மனைவி மக்களோடு வாழ்வர்.

எயினர்களது குடில்கள் அணிலும் எலியும் நுழையாத படி ஈந்தின் ஓலையால் வேயப் பெற்று முட் பன்றியின் முதுகுபோலத்தோன்றும். பிள்ளையைப் பெற்ற எயிற்றி குடிலின் ஒரு புறத்தே பிள்ளையோடு மான் தோலாகிய படுக்கையில் முடங்கிக் கிடப்பாள். மற்றைய எயிற்றியர் கரம்பை நிலத்தைப் பாரையாற் கிண்டி எறும்பு சேர்த்து வைத்திருக்கும் புல்லரிசியை வாரி எடுப்பர். எடுத்துப் பார்வை மான் கட்டி நிற்கும் விளவின் நிழலுடைய முற்றத்தே தோண்டிய நில வுரலிற் சொரிந்து குறிய உலக்கையினாற் குத்துவர்; ஆழ்ந்த கிணற்றில் மொண்ட சவர் நீரை ஓறுவாய் போன பானையில் உலையாக வார்த்து முறிந்த அடுப்பில் வைத்து ஆக்கிய சோற்றை இறைச்சிக் கருவாட்டோடு தேக்கிலையில் இட்டு உண்பர்.

எயினரின் அரணிடத்தே உள்ள அகன்ற வீடுகளில் பகைவரைக் குத்தியதாற் கூரிய வேல்களும் பரிசைகளும் அம்புக் கட்டுகளும் விற்களும் நிரையாகச் சார்த்திக் கிடக்கும். உயர்ந்த மதில்கள் ஊகம்புல்லால் வேயப்பட்டிருக்கும். தலை வாயில்களில் தேன் கூட்டைப்போன்ற அம்புக்கட்டுகளுடன் துடியும் தூங்கும். வீட்டு வாயிலிற் சங்கிலியாற் கட்டப்பெற்ற நாய்கள் நிற்கும். இவ்வகையான குடியிருப்பு, முள் வேலியினையும் அதனைச் சூழ்ந்த காவற் காட்டையும் உடையதாயிருக்கும். வாயிலிடத்தே நீண்ட முளையுடைய கழு மரங்கள் நிரையாக நாட்டப் பெற்றிருக்கும். அங்குறைவோர் நெற் சோற்றையும் நாய் வேட்டையாடிக் கொணர்ந்த சங்கு மணி போலும் முட்டையுடைய உடும்பின் பொரியலையும் உணவாக உடையர்.

இம்மறக்குடியிலுள்ள சூற்கொண்ட மகளிர் யானை எதிர்ப்படினும் வலிய இடி இடிப்பினும் அஞ்சார். வலிமையாற் கொள்ளை கொண்டுண்ணும் உணவினை யுடையவனும், வாட்போர் செய்யுங் குடியிற் பிறந்தவனும், புலியின் மீசை போன்ற தாடியுடையவனுமாகிய மறவன் அந் நிலத்துத் தான் குறிவைத்த மிருகத்தைத் தப்பாமற் பிடிக்கின்ற வேட்டை நாய் போலக் காவலுடைய முல்லைநிலத்தே செல்வன்; சென்று அவர்களது பசுக்களை அடித்துக் கொண்டு வந்து விடியற் காலையிற் கள்ளுக்கு விலையாகக் கொடுப்பான். அதற்குப் பின், வீட்டிலே நெல்லாற் சமைத்த கள்ளையுண்டு மன்றிடத்தே வலிய கிடாயை அறுத்துத் தின்று மத்தளம் முழங்க இடத்தோளை வலப்பக்கத்தே வளைத்து நின்றாடுவான். (பெரும்பாண்)

செம்மறிக்கிடாயின் கொம்புபோல் முறுக்கிப்பிடரியிடத்தே தூங்கும் மயிரும் சிவந்த கண்ணுமுடைய மறவர், இருமல் தீர்க்கும் மருந்தோடு நெருப்பிற் கருகிய வாரிய

கோலோடு வில்லைப் பிடித்து நுரை தெறித்த மக்துகள் செறு கிக் கிடக்கும் இடத்தே நிற்கும் நிரைகளின் புறத்தே, காலில் கட்டிய செருப்பு ஒலிக்கும்படி சென்று காவலுடைய இடத்தே கன்றுகளோடு நிரையைக் கவர்ந்து கொண்டு செல்வர். (அகநானூறு)

பாலைநிலத்தில் அரத்தின் வாய் போன்ற பரற்கற்கள் நிறைந்துகிடக்கும். அம் மேட்டு நிலத்தே வட்டமாகிய மதில் சூழ்ந்திருக்கும். அங்கு வாழ்வோர், அங்குறையுங் காளிக் குப் பலியாகக் கொடுத்த சிவந்த இறைச்சியினின்றும் ஒழுகுகின்ற இரத்தமும் பசிய நிணமும் கொழுவிய குட ரும் எட்டுத் திசைகளிலும் சிந்திககிடக்கும். வேம்பின் கிளை களில் வேர்களாற் கட்டிய ஊசல்கள் தொங்கும். வழிபடு வோர் பலியாகப் பிடுங்கி வைத்த கண்களாகிய விளக்குப் பிர காசிக்கும். மான் கொம்பும் மயிலிறகும் தோரணங்களாகத் தூங்கும். திரண்ட மூங்கிலிற் கட்டிய கொடி அசையும். பச்சைக் கிளி போன்றவளாகிய காளி, கேடகமும், வாளும், அம்புக் கட்டும், எண்வகைப் படைகளும் ஆகிய இவற்றைத் தரித்திருப்பாள். முத்துப் போன்ற பல்லும் கயல் போன்ற மதர்த்த விசாலித்த கண்ணும், சிலை ஒத்த புருவமுமுடைய காடு கெழு செல்வி கலையை வாகனமாகக் கொண்டு கல்லாற் செய்த மதில் சூழ்ந்த ஆலயத்தில் வீற்றிருப்பாள். வில்லை யுடைய மறவர் அக்கோயிலின் ஒரு புறத்து ஒதுங்கியிருந்து அவ்வழியே செல்லும் வணிகர் கூட்டத்தை அடித்துப் பறிப் பர். நடுகற்களிற் றடியைக் கோத்துப் பசுக்களை அகப்படுத்தி வைக்கும் இடங்களும், ஆட்களைக் கொன்று பிணங்களை மூடிக்குவித்திருக்கும் கற்கும்பங்களும், ஒன்றோடு ஒன்று பின்னிய பற்றைகளுடைய மலைகளும் வெட்டிய கால்களை இட்டு வைத்திருக்கும் குழிகளும், தலைகளை மறைத்து வைக் கும் புல்லும், பொந்துகளும், வெளியாகிய சவர் நிலங்

களும், நீரில்லாத ஆறும், முடிவடையாத வழியும், ஊரில்லாத காடும், வழியுடையனவாய்ப் பின் வழியின்றியிருக்கும் நிலங்களும், சுனைவற்றிய பரவை நிலமும், பாறைகளாலாகிய குன்றுகளும், இவ்வாறு இயற்கையாகவும் செயற்கையாகவுமமைந்து ஒன்று போல் அளவு காணற்கரியன பலவாய்க் குளிர் காலத்திலும் வெப்பமுடையனவாகிய இடங்களுண்டு.

ஓமை, உழிஞ்சில், உலவை, உகாய், கடு, தான்றி, கொடிய முள்ளுடைய தொடரி, நாகம், அரசு, ஆர், ஆத்தி, இருள், இண்டம், குரவு, கோங்கு, கள்ளி, கடம்பு, முள்ளி, முருக்கு, பலாசு, திரண்ட காலுடைய எருமை, இலவு, இனிய காயுடைய நெல்லி, வாகை முதலியவும் பிறவுமாகிய வயிர மரங்கள் காயந்திருத்தலின் மயிலும் குயிலும் அவற்றினிடையே செல்லா. நுண்ணிய பொறியுடைய புறவின் சிவந்த காலுடைய சேவல் வெள்ளிய சிறகுடைய பேட்டோடு விளையாட்டு விரும்பி வலிய கோடரங்கற்களை விழுங்கிப் பொரிகின்ற கள்ளியின் கவர்பட்ட கொப்பில் இருந்து தூரத்தே ஓசை கேட்கும்படி கத்தும். தோலாகிய முலையுடைய காட்டுப் பன்றியின் பிணை மெலிந்த நடையுடைய யானையோடு உலர்ந்த மரலையுண்டு விடாயினால் கானல் நீரிடத்து ஓடும். நெருப்புப் போன்ற பசி நீங்காத செங்குரங்கு கையிடத்தே மகவைத் தழுவிக் காஞ்சூரையின் இலையிற் சிந்தியிருக்கும் தேனைக் கையினாற் தொட்டு நக்கும். அயலே இருந்த கடுவன் அதைப் பார்த்துப் பொறாது காஞ்சூரையின் கிளையிலிருந்த தேனை ஊட்டி அதன் தாகத்தைத் தணிக்கும். வெப்பமுடைய மலைச் சாரலிலுள்ள மூங்கிலின், உதிர்ந்து விளங்குகின்ற முத்தை மழைத் துளியெனக் காட்டுக் கோழியின் சூடுடைய சேவல் அலகாற் குத்தி எடுக்க மாட்டாது தத்தி நின்று தளரும். கன்றினைத

தழுவிய பெரிய அடியுடைய கரிய பிடி ஈரம் உலர்ந்த நாருடைய முருங்கையின் வெள்ளிய பூவாகிய உணவை வெறுத்து நெல்லியின் பசுங்காயைப் பல்லுடைய கொடும் பிடத்தே அடக்கிக் கொண்டு, வழி செல்லும் புதியோர் சேற்றைத் தோண்டித் தழையால் மூடியபள்ளத்தில் உலா வும். சிவந்த தளிருடைய இருப்பையின் பசிய பூங்கொத் துகளை விரும்பித் தூங்கும் வௌவால், பல பக்கங்களிலும் நெருங்கிப் பறக்கும். (உதயணன் கதை)

அம்பை எய்யும் வில்லைக் கையிலேயுடைய மறவர் குடி யிற்பிறந்த தெய்வமேறி ஆடுபவள் தனது ஊர் நடுவேயுள்ள மன்றிடத்துத் தெய்வத் தன்மையுற்று மெய்ம்மயிர் சிலிர்த்து, நிமிர்த்திய கைகளை ஒற்றையும் இரட்டையுமாக அவிநயத்தோடே கூட்டித் தாளத்துக்கு ஒப்ப அடிபெயர்த் துக் கானவர் வியப்ப ஆடினாள். ஆடிக்கூறுகின்றாள்:—

முன்சொல்லிய நுங்கடன் கொடாமையின் வலிய வில்லையுடைய எயினர் மன்றுகள் இன்று பாழ்பட்டன; * ஊர்களிற் றிரண்ட நிரைகள் மிக்கன. கொற்றவைக்குக் கடன் கொடாமையின் இம்மறக்குடியிற்றாயம் பற்றி வரு கின்ற எயினர், தமக்கு முறைமையாகி வருகின்ற ஆறெறி சூறை ஆகோள் முதலியவற்றால் விளையும் செல்வங்குன்றி அறக்குடிகளைப் போலச் சினங்குறைந்து செருக்கு அடங் கினர். கலையாகிய ஊர்தியையுடைய செல்வி தான் கொடுத்த வெற்றிக்கு விலையாகிய உயிர்ப் பலியை உண்ணக் கொடுப்பி னன்றி நுஞ்சிலைக்குரிய வெற்றியைக் கொடுப்பாளல்லள். களவு கொண்டுண்ணும் ஊணையுடைய மக்காள்! நுஞ் சுற் றத்தார் மதுவுண்டு செருக்கும் இல்வாழ்க்கையை விரும்புவீ ராயின் செல்விக்கு நேர்ந்த கடனைக் கடிதிற் கொடுமின்.

* கொள்ளையிடாமையால் அயற் கிராமங்களில் நிரைகள் மிக் கனவாயின என்றவாறு.

அதனைக் கேட்ட, தந்தலையைத் தாமே பலியாக அரிந்து வைக்கும் எயினர், தொல் குடியிற் பிறந்த தேவ ராட்டியின் நெளிந்த கூந்தலைச் சடையாகக் கட்டி, அம்முடி யிலே சிறிய வெள்ளிய அரவின் குட்டியாகப் பொன் நாணினை வளையச் சுற்றிக் காவற் காடு சூழ்ந்த தோட்டப் பயிரை அழித்த பன்றியின் கோட்டைப் பறித்து அதனை இளைய வெள்ளிய பிறை யெனும்படி சாத்தினர்; தறு கண்மையுடைய வலிய புலியின் வாயைப் பிளந்து உதிர்த்த பல்லை வெள்ளிய மாலையாகத் தரித்தனர். அதனது வரியும் புள்ளியுமுடைய தோலை மேலே மேகலையாக உடுத்தனர். வில்லைக் கையிற் கொடுத்தனர். கொடுத்து அவளை முறுக் குண்ட கோடுடைய கலைமீதிருந்தினர். பின் பறையைக் கொட்டி அவளை வழிபட்டனர்.

மாறுவாரின் சீறூரிடத்து நிரை கவர்தற்கு வீரர்வெட்சி மாலையைச் சூடினர்; கொற்றவையின் கொடியை முன்னே உயர்த்திச் சென்றனர். பகைவரின் காட்டிடத்தே அவர்க்குச் சேரும் தீமைக்கு அறிகுறியாகக் கரிக் குருவி குரல் எழுப் பிற்று. இவ்வாறு சென்று கவர்ந்து கொணர்ந்த பசுக்களை வேல் வடிக்கும் கொல்லனும், துடி கொல்லும் புலையனும், பாணரும், புள்ளின் நிமித்தத்தை ஆராய்ந்து சொன்னோ ரும் ஆகிய இவர்களுக்குப் பகுந்தளித்தனர். (கள்ளுடை) பழங் கடன் கொடாமையின் கட் கொடாத கள் விற்கும் அவளுக்கும் கொடுத்தனர். (சிலப்பதிகாரம்)

வரிந்து கட்டின வில்லும் கடைகுழன்றமயிரும், புலி போன்ற பார்வையும், தறுகண்மையுமுடைய மறவர், வழிச் செல்வோரிடத்திற்பெறும் பொருளில்லையாயினும் தங்கள் அம்பு பட்டு அவர் பதைப்பதைக் கண்டு மகிழ்வர். (கலி) அவர்களின் தாடி முறுக்கிய மான்கொம்புபோன்றது.

## தொழில் பற்றிய சாதிகள்

மக்கள், தாம் வாழ்ந்த நிலம் பற்றி வேடர் இடையர், எயினர் குறவர் உழவர் முதலிய பெயர்களைப் பெற்றது போலவே, தொழிலும் ஒழுக்கமும் பற்றி அந்தணர் அரசர் வணிகர் வேளாளர் முதலியவும் பிறவுமாகிய பெயர்களைப் பெற்றனர். நிகண்டு நூல்களிற் காணப்படும் ஒவ்வொரு குலத்தினர்க்குரிய பெயர்களும் அவரவர் மேற்கொண்ட தொழில்பற்றி எழுந்தனவென்று இனிது விளங்கும். அந்தணர் அரசர் வணிகர் வேளாளர் முதலியோர் பெரும்பாலும் நகர்களில் வசித்தவர்களாவர். அரசனது கருமத் தலைவர் ஆதியோர் இந் நாற்குடியில் அடங்குவர். ஆரியரது பிராமண சத்திரிய வைசிய சூத்திரர் என்னும் பகுப்புக்கும் தமிழர்களுடைய நாற்குலங்களுக்கும் யாதொரு தொடர்புமின்று. ஆரியருடைய சாதிகள் செய்தொழிலானன்றிப் பிறப்பினால் ஏற்பட்டன. ஆரியர் இந்திய நாட்டையடைந்த போது அவர்களிடையே சாதிப்பிரிவு ஏற்படவில்லை. மக்களின் நிறத்தைக்கொண்டே அவர்கள் சாதிகளை ஏற்படுத்தினர். அவர்களின் சாதிக்குப் பிறப்பே காரணம். இதனை மனு ஸ்மிருதி முதலிய நூல்களிற் பரக்கக் காணலாம். ஸ்மிருதிகளிற் காணப்படும் அனுலோம பிரதிலோமர் போன்ற கலப்புச் சாதிகள் தென்னாட்டிற் கிடையா. ஸ்மிருதிகளிற் காணப்படும் சூத்திரருக்குரிய தருமங்களும் விவிலிய வேதத்தின் பழைய ஏற்பாட்டில் அடிமைகளுக்குரிய தருமங்களாகச் சொல்லப்படுவனவும் ஒரேவகையாகக் காணப்படுகின்றன.

அவ்வந் நிலங்களிலுள்ள மக்கட்குரிய திணைப் பெயர்கள் அவ்வந் நிலங்களிற் பிறத்தலினாலும், பிறர் அந்நிலங்களிற்றங்கி அந்நில மக்கட்குரிய தொழிலைப் புரிவதினாலும்

ஏற்படுமென்பது "பெயரும் வினையும் என்றாயிருவகைய திணைதோறு மருவிய திணை நிலைப் பெயரே" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தால் விளங்கும்.

## அந்தணர்

தமிழ் நாட்டுத் துறவோர் அந்தணரெனப்பட்டனர். அவர் காவி தோய்த்துடுத்த உடையினராய் முக்கோல் மணை கரகம் ஆதியவற்றை உறியில் வைத்துத் தோளிடத்தே சுமந்து குடை நிழலிற் செல்லும் செலவினர், எனப் பழந் தமிழ் இலக்கியங்களிற் காணப்படுகின்றது.*

அந்தண ரென்போ ரறவோர் மற்றெவ்வுயிர்க்குஞ்
செந்தண்மை பூண்டொழுக லான்"

---

* "எறித்தரு கதிர் தாங்கி யேந்திய குடை நீழ
லுறித் தாழ்ந்த கரகமு முரை சான்ற முக்கோலு
நெறிப்படச் சுவலசைஇ வேறோரா நெஞ்சத்துக்
குறிப்பேவல் செயன் மாலைக் கொளை நடையந்தணீர்"

(கலி 9)

(இதன் பொருள்) குடையினால் வெயிலைத் தாங்கி உறியிலே வைத்த தண்ணீர்க் கரகத்தையும் முக்கோலையும் தோளிடத்தே சுமந்து செல்லும் இயல்புடைய அந்தணீர்.

"சீர்மிகு சிறப்பினோன் மாமுதற் கைசேர்த்த
நீர்மலி கரகம் போற் பழந் தூங்கு தாழை"

(இ-ள்) தக்கணாமூர்த்தி ஆலமரத்தே தாமிருப்பதற்கு முன்னே தூக்கி வைத்த நீர் நிறைந்த குண்டிகையைப் போலப் பழந்தூங்கும்
"முக்கோலந்தணர் முது மொழி நினைவார் போல (கலி 126)

" அந்தணர்—காஷாயம் போர்த்த குழாங்கள்" (நச்-உரை)
தண்டொடு பிடித்த தாழ்கமண்டலத்துப்
படிவவுண்டிப் பார்ப்பனமகனே (குறுங்-156)
கற்றோய்த் துடுத்த படிவப் பார்ப்பான்
முக்கோலசை நிலை கடுப்ப (முல்லைப் பாட்டு)
நூலே கரகம் முக்கோல் மணையே
ஆயுங் காலை அந்தணர்க் குரிய" (தொல்-மரபு)

களையே குறிப்பிட்டிருத்தலும் ஆகிய இவை மேற்கு ஆசியாவுக்கும் இந்தியாவுக்கு மிடையில் கி. மு. 8-ம், 7-ம், 6-ம் நூற்றாண்டுகளில் ஒழுங்கான கடல்மார்க்கமான வியாபாரப் போக்குவரத்து இருந்த தென்பதை உணர்த்தும். பபிலோனில் டைகிரஸ். யூபிரூட்டிஸ் என்னும் நதிகள் சந்திக்கும் இடத்துக்குச் சமீபத்தில் தமிழர் குடியேறி இருந்தார்கள். அங்கு கிருட்டிண பலதேவ வழிபாடுகள் இருந்தனவென்று அறியப்படுகின்றது. போதாயனர் மேற்கு ஆசியாவோடு வர்த்தகஞ் செய்தவர்களைக் கண்டித் திருக்கின்றனர். இதனால் வட இந்தியர் அவ்வியாபாரத்திற் பிரதானமானவர்கள் அல்லர் எனத் தெரிகின்றது. அர்த்த சாத்திரஞ் செய்த கௌடலியர், வட இந்தியாவிலும் தென்னிந்தியாவே வாணிகத்திற் சிறந்து விளங்கிற்றென்றும், தென்னிந்தியாவில் பொன், நவமணி, முத்து, சங்கு முதலிய பொருள்கள் கிடைத்தனவென்றும், வட இந்தியா கம்பளம், தோல் முதலியவற்றையே அளித்ததென்றும் கூறுகின்றார்.

மதுரை அழகான ஆடைகளுக்குப் பேர் போனது. தமிழர் கடல் கடந்து திரவியந் தேடினார்களென்று தொல்காப்பியங் கூறுகின்றது. மேற்கு ஆசியாவிலுள்ள நாடுகளோடு தென் இந்தியா வியாபாரம் நடத்தியதாதலின் கி. மு. 20-ல் பாண்டிய அரசன், ஆகஸ்தஸ் என்னும் ரோம சக்கரவர்த்திக்குத் தூதனுப்பினான். இன்னொரு அரசன் கிரேக்க போர் வீரரைத் தனக்கு மெய்காப்பாளராக அமர்த்தினான். யவன போர் வீரர் பாண்டியரின் கோட்டைவாயில்களைக் காவல்புரிந்தனர் *

---

* கடிமதில் வாயில் காவலிற் சிறந்த
வடல்வாள் யவனர் (சிலப்)

Kennedy's article on the early commerce of Bobylon with India—J. R. A. S.

கிறிஸ்துவுக்குப் பல நூற்றாண்டுகளின் முன் இந்திய வியாபாரிகள் பர்மா வழியாகவும் அதன் தென்கரை வழியாகவும்சென்று கம்போதியாவில் (இந்துசீனம்) வியாபாரத் தொடர்பை ஏற்படுத்தினர். கம்போதியாவிற் குடியேறிய தமிழர் அங்கு ஓர் இராச்சியத்தை ஏற்படுத்தினர். அங்கு சிலமாகக் காணப்படும் கட்டிடங்களில், கடற்போர், கடற் பிரயாணம் ஆகியவற்றை விளக்கும் சித்திரங்கள் காணப்படு கின்றன. தமிழர் சீனாவோடு வியாபாரத் தொடர்புடையவர் களாயிருந்தார்கள் என்பதில் சந்தேகம் இல்லை. கியூசோக் குடாவை அடுத்து கி. மு. 7-ம் நூற்றாண்டில் இந்தியர் குடி யேறி யிருந்தார்களென்று ரெறியன் டிலாகோபிறிக்என்னும் ஆசிரியர் கூறுகின்றனர் § கடல் தரை என்னும் இரு வழிக ளாலும் இந்தியாவுக்கும் சீனாவுக்கும் போக்கு வரத்து இருந்தது. கிறித்தாப்தத்துக்கு முன்னும் தமிழர் சுமத்திரா யாவா முதலிய நாடுகளோடு வியாபாரம் நடத்தினார்கள். இதனை மணிமேகலை என்னும் நூல் தெளிவாகக் கூறுகின் றது. சுமத்திராவை அடுத்த பாலி என்னும் தீவில் இன்னும் தமிழருடைய பழக்க வழக்கங்களும், நாகரிக சின்னங்களும் வழிபாட்டு முறைகளும் காணப்படுகின்றன.

கடல், பரவை, புணரி, ஆர்கலி, முன்னீர் முதலியவும் ஓடம், கலம், மரக்கலம், தோணி, மிதவை, கப்பல், நாவாய், மரம், திமில், அம்பி முதலியவுமாகிய கடலையும் மரக்கலத்தை யுமுணர்த்தும் தூய தனித்தமிழ்ச் சொற்கள் தமிழர் கடலை யும் கடற்பிரயாணத்தையும் நன்கு அறிந்திருந்தார்கள் என் பதற்குச் சான்றுகளாகும்.

---

§ Prof. Jerrian De la Couperic proves in his western Origin of the early Chinese civilization that about the year 680 B. C. the sea traders of the Indian Ocean

கிறித்த ஆண்டின் முற்பகுதியில் தென்னிந்தியாவுக்கும் ரோமுக்கு மிடையில் நெருங்கிய வியாபாரத் தொடர்பிருந்தது. உரோமர் முசிறியிலும் பிறவிடங்களிலும் குடியேறி யிருந்தனர். யவன வியாபாரிகள் அடிக்கடி போக்கு வரத்துச் செய்யும் இடங்களுள் முசிறி பிரதான இடமாயிருந்தது.* பியுங்கேரியன் அட்டவணையில் § (கி. பி. 225) கிரேக்கர் தமது வியாபார பாதுகாப்பின் பொருட்டு முசிறியில் 2000 போர் வீரரை வைத்திருந்தார்களென்றும், ஆகஸ்தஸ் அரசனைக் கனம் பண்ணுதற்பொருட்டு அவனுக்கு ஓர் கோயில் அமைத்திருந்தார்களென்றும் சொல்லப்படுகின்றன. மலையாளக்கரையிலுள்ள பிசன்றியம் (Byzantium) என்னும் இடத்தில் கிரேக்கர் குடியேறியிருந்தனர். ரோம தேசத்தினின்றும் அழகிய பேழைகள் (யவனச்செப்பு) பாவை விளக்கு மதுவகை (wine) முதலிய பொருள்கள் தமிழ் நாட்டுக்குக் கொண்டுவரப்பட்டன. மிளகு, தந்தம், நவரத்தினம், பட்டாடை, கறுவா, சந்தனக் கட்டை முதலியன தமிழ் நாட்டினின்றும் யவன தேசத்துக்குக் கொண்டு போகப்பட்டன.

உரோம வியாபாரப் பெருக்கம் அதிகம் இருந்தமையால் ரோமர் தமது நாணயங்களைத் தென்னிந்தியாவில் வழங்கினர். ரோமரின் நாணய வுற்பத்திச்சாலை ஒன்று தென்னிந்தியாவில் இருந்ததாக நம்பப்படுகின்றது. தென்

---

founded around the present Gulf of Krao-tchu a colony which they called Langa-ga or Langa-ya," (Tholkappiam and Tamil script —S. R. Muttukumaru.

* " பேரியாற்று வெண்ணுரை கலங்க யவனர் தந்தவினை
மாணன் கலம் பொன்னொடு வந்து கறியொடு பெயரும்
வளங்கெழு முசிறி " (அகம் 149)

§Peutingerian Tables

னிந்தியாவில் தெல்லிச்சேரிக்குச் சமீபத்திலுள்ள கோட்டயத்திலும், மதுரைமாகாணத்திலுள்ள கலியன்புத்தூரிலும், கோயம்புத்தூர் மாகாணத்திலுள்ள பொள்ளாச்சி, கருவூர் வெள்ளலூரிலும், புதுக்கோட்டை முதலிய இடங்களிலும் ஏராளமான உரோமன் நாணயங்கள் கண்டெடுக்கப்பட்டன. இவை உரோம தென்னிந்திய வியாபாரப் பெருக்கத்தைக் காட்டுகின்றன. இந்திய சரக்குகள் அலக்சாண்டிரியா வழியாக உரோமை அடைந்தன.

தென்னிந்தியாவில் முத்துக் குளிப்புப் பிரதான தொழிலா யிருந்தது. * வடமொழியில் முத்தைக் குறிக்கும் முத்த என்னுஞ் சொல் முத்து என்பதன் திரிபே. தென்னிந்தியாவில் முத்துக் கிடைப்பதாக உரோமர் அறிந்திருந்தனர். அவர்கள் தமிழ் நாட்டினின்றும் ஏராளமான முத்தை வாங்கிச் சென்றனர். உரோமானிய பெண்கள் முத்தில் அதிகம் மோக முடையவர்களா யிருந்தார்கள். அவர்கள் தமது மேனியை முத்துக்களால் அலங்கரித்தனர். முத்துக்கோவைகள் ஒன்றோடு ஒன்று முட்டி ஒலி செய்வதைக் கேட்டு அவர்கள் பூரித்தனர். காலிற் றரிக்கும் செருப்புகளின் வார்கள் தாமும் முத்துக்களா லலங்கரிக்கப்பட்டன. கயஸ் குளோடியர் என்னும் உரோம அரசனின் இராணி உலோலா, 300,000 தங்கநாணயம் விலையுள்ள முத்துக்களால் தன்னை அலங்கரித்திருந்தாள். கிளியோபத்திரா என்னும் எகிப்திய இராணி, கீழ்நாட்டு அரசருக்கு முன் சொந்தமா யிருந்தனவும் காதில் அணியப்படுவனவுமாகிய இரண்டு பெரிய முத்துக்களை வைத்திருந்தாள். 80,000 தங்கநாணயம் விலையுள்ள ஒரு முத்தை அவள் காடியில்

* "யவனர் நன்கலந்தந்த தண்கமழ் தேறல்" (புறம் 56)
"கொற்கை முன்றுறை யவிர்கதிர் முத்தமொடு" (அகம் 21)

(வின்ஞரியில்) கரைத்துக் குடித்தாள். மற்ற முத்தைக் கரைக்குஞ் சமயத்திற் பாங்கியாற் றடுக்கப்பட்டாள். தென்னிந்தியாவினின்றும் உரோம இராச்சியத்துக்கு அனுப்பப் பட்டவற்றுள், முத்து, வைடூரியம், கோமேதகம், நீலம் முதலிய இரத்தின வகைகளே பிரதானமானவை. அந்தோனியஸ் என்னும் அரசனின் மந்திரியாகிய நோநியஸ் என்பவன் அவனிடத்திலிருந்த ஓர் நீலக்கல்லின் பொருட்டு வேலையினின்றும் நீக்கப்பட்டான். அவன் தனது செல்வம் எல்லாவற்றையும் விட்டு ௨000 தங்கநாணயம் விலையுள்ள நீலக்கல்லுடன் தப்பி ஓடினான். ஆண்டில் இரண்டு இலட்சம் தங்க நாணயம் வரையில் விலையுள்ள உரோமநாட்டின் செல்வத்தை இந்தியா விழுங்கிவிடுகின்றதெனப் பிளினி (கி. பி. 62-113) என்பவர் வெறுப்பாகக் கூறியிருக்கின்றார்.

பிற நாட்டு வர்த்தகர் மிளகு, கசகசா, சந்தனம் ஆகியவற்றை மலையாளக் கரையினின்றும் வாங்கினர். நெல்லூர் தொடக்கம் தெற்குக் கூடலூர், புதுச்சேரி வரையிலும் ஒருவகையான தகட்டுச் செப்பு நாணயங்கள் நிலத்திற் கண்டெடுக்கப்படுகின்றன. இவைகளோடு உரோமன் நாணயங்களும் துளையிட்ட சீனநாணயங்களும் கண்டெடுக்கப்பட்டன. பெரிய மழைக்கும் புயலுக்கும்பின் மீன்பிடிகாரரின் பெண்டு பிள்ளைகள் இவ்வகையான நாணயங்களைக் கடற்கரை ஓரங்களிற் பொறுக்கி எடுக்கிறார்கள். கிறித்தாப்தத்தின் நாலைந்து நூற்றாண்டுகளாகப் பிறதேசவர்த்தகம் தமிழ்நாட்டில் பெரிதும் நடைபெற்றதென்பதற்கு இது போதிய அத்தாட்சியாகின்றது. செம்புத் தகட்டுக் காசுகளின் ஒருபுறத்தில் இரண்டு பாய்மரமுள்ளதும் சவள்தடிகளாற் செலுத்தப்படுவதுமாகிய தோணியின் வடிவம் பொறிக்கப்பட்டிருக்கிறது.

வணிகர் கடல் கடந்து மரக்கலங்களில நெடுந்தூரம் செல்வதைப் பற்றி மணிமேகலை என்னும் நூல் அழகாகக் கூறுகின்றது. "திரைகடலோடியுந் திரவியந் தேடு" என்னும் பழமொழி இன்றும் தமிழ் நாட்டில வழங்குகின்றது.

முசிறி, கொற்கை, தொண்டி, மாந்தை, புகார் முதலியன தமிழ் நாட்டின் பிரதான துறைமுகங்களாகும். புகார் நகரின் சிறப்பைக் கடியலூர் உருத்திரங் கண்ணனார் பட்டினப் பாலையில் விரித்துக் கூறியிருக்கின்றார். பண்டசாலை முற்றங்களில் குவிந்து கிடக்கும் பண்டங்களைப் பற்றியும் சுங்கங் கொள்வோரைப் பற்றியும் முன்னோரிடத்திற் கூறப்பட்டுள்ளன. கடைவீதிகளில் கங்கை, காவேரி நாடுகளின் விளை பொருள்களும் ஈழம், கடாரம் (பர்மா) முதலிய தேசங்களின் உணவுப் பொருள்களும், கீழ் கடலிற் பிறந்த பவளமும், தென்கடலிற் குளித்த முத்தும், மேற்குக் காற்றுடி மலையிற் பிறந்த சந்தனக் கட்டையும், இமயமலையிற் பிறந்த பொன்னும், மணியும், அரேபியாவினின்றும் கடல் மார்க்கமாக வந்த குதிரைகளும், வண்டிகளிலும், கழுதைகளிலும் கொணர்ந்த மிளகு மூடைகளும் தேக்கிக் கிடந்தன.

மரக்கலங்கள் திசை அறிந்து செல்லும் கலங்கரை விளக்கங்கள் கடற்கரைப் பட்டினங்களில் அமைக்கப்பட்டிருந்தன இக்கட்டிடங்கள் ஓலை முதலியவற்றால் வேயப்படாது மூடுசாந்திடப் பெற்றிருந்தன.

மரக்கலங்களின் உறுப்புகளைக் குறிக்க வழங்கும் சொற்கள் தமிழ்ச் சொற்களாகவே காணப்படுகின்றன. கப்பற் பாட்டு எனத் தற்காலம் வழங்கும் பாடல்களிலும் இச்சொற்களைக் காணலாம்.

# உழவு

"சுழன்றுமேர்ப் பின்ன துலக மதனு
லுழந்து முழவே தலை" (குறள்)

தமிழர் உழவுத் தொழிலை மற்றெல்லாத் தொழில்களினும் உயர்ந்ததும் சிறந்ததுமென்று கருதினர். "உழுதுண்டு வாழ்வதற் கொப்பில்லை." எனத் தமிழ் மூதாட்டியும், "உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாந் தொழுதுண்டு பின்செல்பவர்" என்று வள்ளுவனாரும் உழவுத் தொழிலின் சிறப்பைக் கூறுதல் காண்க. உழுது எருவிட்டுக் களை கட்டிப் பயிர் செய்யவேண்டிய நுட்பங்களைத் திருக்குறள் கூறுகின்றது. அக்காலத்தில் எருவே பசளையாகப் பயன் படுத்தப்பட்டது. வயல்களுக்கு நீர்ப் பாய்ச்சும் வசதிகள் அரசினரால் ஏற்படுத்தப்பட்டிருந்தன. நெல் விளையும் வயல்களையுடையதாகிய மருத நிலங்களில் ஏரிகளும் வாவிகளும் காணப்பட்டன. ஆற்றிலிருந்து செல்லுங் கால் வாய்கள் வழியாக வயல்களுக்கு நீர் பாய்ச்சப்பட்டது. ஆறில்லாத விடங்களில் ஏரிகளிலிருந்து நீர் பாய்ச்சப் பட்டது. கரிகாற் சோழன் விளை நிலங்களுக்கு நீர் பாய்ச் சும் வசதிகளைச் செய்வதற்காகக் காவிரிக்கரையில் பெரிய அணை கட்டுவித்தான். இதற்கு இலங்கையிலிருந்து 12,000 சிங்களவர் சென்றிருந்தார்களென இலங்கைச் சரித்திரங் கூறுகின்றது.

தமிழில் நூல் செய்வோர் நாட்டுவளத்தைக் கூறு மிடத்து, உழவர், நாற்றங்கால்களில் நாற்றுப் பிடுங்குதல் நாற்று முடிகளைச் சுமந்து சென்று வயல்களிற் போடுதல், ஆம்பலிலையிற் கள்ளை வார்த்து உண்ட கடைசியர் பாடல் களைப் பாடிக்கொண்டு நாற்று நடுதல், களைகட்டல், நெல் லரிதல், சூடடுக்கல், கடா விடுதல், பொலி தூற்றல், கிணைப்

பொருநர் களம் பாடல், தானியங்களைக் கூடுகளின் வாய் களைத் திறந்து கொட்டல் முதலிய சிறப்புகளை வருணித்துக் கூறுதல் மரபு. கம்பர் வேளாண் மரபுகளை விளக்கி ஏரெழுபது என்னும் அரிய நூலொன்றைச் செய்திருக் கின்றனர்.

மருதநிலங்களில் நெல்லே யன்றிக் கரும்பும் விளைந் தது. வயல்களின் இடையே உள்ள கொட்டில்களிலுள்ள ஆலைகளில் கருப்பந்தடிகளைப் பிழிந்து எடுக்கப்பட்ட சாறு, கட்டியாகக் காய்ச்சப்பெற்றது. குறிஞ்சி நிலத்தில் வரகு, தினை, கொள்ளு, அவரை முதலியன விளைந்தன. * வயல் நிலங்கள் மிகவும் செழிப்பாயிருந்தன. யானை நின் றால் மறைக்கக் கூடிய கதிரையுடைய கழனி நிலம் என்றும், மூங்கிலைப் போன்றும், கரும்பைப் போன்றும் வளரும் நெல் என்றும், இலக்கியங்களில் நெற்பயிரின் செழுமை விதந்தோதப்படுகின்றது. உழுதொழிலாற் சிறந்து செல்வ வாழ்க்கை யுடையரா யிருந்தோர் அரசனாற் கௌரவிக்கப் பட்டு காவிதிப்பட்டம் வழங்கப் பெற்றனர். தமிழ் நாட் டின் உயிர் நாடி உழுதொழிலாகவே இருந்தது. இன்றும் இருக்கின்றது.

இலமென் றசை இ இருப்பாரைக் காணி
னில'மென்னு நல்லா ணகும் (குறள்)

(இதன் பொருள்) யாம் வறியேம் என்று ஏங்கி இருப்பா ரைக் கண்டால் பூமாதேவி தனக்குள் சிரிப்பாள்.

## கைத் தொழில்

தமிழ் நாட்டிற் பெரும்பாலும் எல்லாவகையான கைத் தொழில்களும் வளர்ச்சி அடைந்தன. உரோம தேசத்துச்

---

*"கருங்கால் வரகே யிருங்கதிர்த் தினையே
சிறுகொடிக் கொள்ளே பொறி கிளரவரையொடு
இந்நான்கு" (புறம் 335)

சீமாட்டிகள் அணிந்த பாலாவி போன்ற பட்டாடைகள் தமிழ் நாட்டு நெசவுகாரராற் செய்யப்பட்டனவே. கண்ணைக் கவரும் பலநிற மூட்டப்பட்ட அழகிய பட்டாடைகளை உரோம வியாபாரிகள், நிறைக்குச்சரியான தங்கத்தைக் கொடுத்து வாங்கினர். ஏழாயிரமாண்டுகளுக்கு முன்னரே தமிழ் மக்கள் ஆடை நெய்யும் தொழிலிற் றேர்ச்சி பெற்றிருந்தார்களென்பது மொகஞ்சோதரோ நாகரிகத்தால் அறியப் படுகின்றது. பழந்தமிழ் இலக்கியங்கள், பூத்தொழிலுடையனவும், இழைபோன விடந்தெரியாத நுண்ணிய நூல்களால் நெய்யப்பட்டனவுமாகிய பலவகைப் பட்டாடைகளைப் பற்றிக் கூறுகின்றன * அக்காலத்து வழங்கிய விதம் விதமான ஆடைகளின் பெயர்கள் சிலப்பதிகார உரையிற் காணப்படுகின்றன. அவை:

கோசிகம், பீதகம், பச்சிலை, அரத்தம், நுண்டுகில், சுண்ணம், வடகம், பஞ்சு, இரட்டு, பாடகம், கோங்கலர், கோபம், சித்திரக்கம்மி, குருதி, கரியல், பேடகம், பரியட்டக்காசு, வேதங்கம், புங்கர்க்காழகம், சில்லிகை, தூரியம், பங்கம், தந்தியம், வண்ணடை, கவற்றுமடி, நூல்யாப்பு, திருக்கு, தேவாங்கு, பொன்னெழுத்து, குச்சரி, தேவகிரி, காத்தூலம், இறஞ்சி, வெண்பொத்தி, செம்பொத்தி, பணிப்பொத்தி.

அக்காலத்திற் பெண்களே வீட்டிலிருந்து ஆடை நெய்தற்குரிய நூலை நூற்றார்களெனத் தெரிகிறது. † அசந்தாக் குகை, இலங்கையிலுள்ள சிகிரியா முதலிய இடங்களிற்

* ஆவியன்ன அவிர் நூற்கலிங்கம் (பெரும்பாண்)
புகை விரித்தன்ன பொங்கு துகிலுடீஇ (புறம் 398)

† நோக்கு நுழைகல்லா நுண்மைய பூக்கனிந்து அரவுரியன்ன அறுவை (பொருநர்)

காணப்படும் புராதீன சித்திரங்களால அக்கால மாதர் நிற மூட்டப்பெற்ற அழகிய பட்டாடைகளை உடுத்தார்களென விளங்குகின்றது.

பொற்கொல்லர் ஆபரணங்கள் செய்வதில் மிகவும் திறமை அடைந்திருந்தனர். அக்காலப் பெண்களும் ஆண்களும் பலவகையான ஆபரணங்களை அணிந்திருந்தனர். இரண்டு பக்கமும் யானைகள் தாமரை மலரை நீட்டி நிற்க நடுவே இலக்குமி வீற்றிருப்பதாகச் செய்யப்பட்ட தெய்வவுத்தி, வலம்புரிச் சங்கு வடிவாகச் செய்யப்பட்ட வலம்புரி, அங்காந்தவாளை மீனின் வடிவாகச் செய்யப்பட்ட வாளைப் பகுவாய், பொன்னரி மாலை, பாதசரம் மகரக்குழை சிறுவரணியும் ஐம்படைத்தாலி, அரசரணியும் வீரதண்டை, முடிப்பதக்கம் முதலியவும் இவை போன்றவுமாகிய பலவகை ஆபரணங்களை யெல்லாம் தமிழ்நாட்டுப் பொற்கொல்லரே செய்தனர்.

அக்காலம் யுத்தத்திற் பயன்படுத்துதற்குரிய வேல், வாள் உடைவாள், சூலம், மழு, சக்கரம், அம்புத்தலை இவை போன்றவற்றையும், நாய் கட்டுஞ் சங்கிலி யானை கட்டுஞ் சங்கிலி, கொழு, பாரை, கூனிரும்பு, யானைகளின் கொம்பிலிறுக்கும் கிம்புரி, மதிலின் மேல் வைக்கப்படும் பலவகையான இயந்திரங்கள் ஆகியவற்றையும் பிறவற்றையும் தமிழ் நாட்டுக் கொல்லரே செய்தனர்.

அரசர் அரண்மனைகளையும், வீடுகளையும், புலி சிங்கம் முதலிய வற்றின் கால் போன்ற திரண்ட காலினையுடைய வட்ட வடிவினவாகிய அழகிய அரசர் பள்ளியறைக் கட்டில்களையும், தேர், சிவிகை, ஓடம், அரசர் வீற்றிருக்கும் சிங்காசனம், உரல், உலக்கை, புலியின் தலை, சிங்கத்தின் தலை போன்ற வாள்களின் பிடிகள், கலப்பை ஆகிய வற்றையும்

அக்கால மக்களுக்கு வேண்டிய மரத்தாற செய்யும் பொருள் களையும் எல்லாம் தமிழ் நாட்டுத் தச்சரே செய்தனர்.

வெண்கலம், செம்பு முதலிய உலோகங்களால் பல வகைப் பாத்திரங்கள் செய்யப்பட்டன. வெண்கலத்திற் செய்யப்பட்ட எருமை, பசு முதலியன, சரித்திர காலத்துக்கு முற்பட்ட ஈமத்தாழிகளுட் காணப்பட்டன. அவை சிறந்த வேலைப்பாடுகளோடு கூடியவையாய்க் காணப்படுகின்றன. சங்குகள், அறுத்து அழகிய வளையல்களாகச் செய்யப்பட்டன. பானை சட்டி செய்வதில் இப்போது உள்ளவர்களை விட முன்னுள்ளவர்கள் மிகத் திறமையுடையவர்களாயிருந்தார்கள். பளபளப்பான பானை சட்டிகளும் பிரேதங்களை இட்டுப் புதைக்கும் தாழிகளும் பல வடிவிற் செய்யப்பட்டன. தையற்காரரும், செருப்பு முதலியவற்றைச் செய்யும் தோலில் வேலை செய்வோரும் இருந்தனர். மாலை கட்டுதலில தமிழர் சிறப்பாகத் திறமை அடைந்திருந்தனர்.

## சிற்பம்

அரசருடைய கோயில்களையும், மானின் கண்போன்ற சாளரங்களையும் நிலா முற்றங்களையுமுடைய அடுக்கு மாளிகைகளையும், பிரமாண்டமான தேவாலயங்களையும் நிருமித்தவர்கள் தமிழ் நாட்டுச் சிற்பிகளே. மதுரைக் கோயில், மேல்நாட்டவருக்கும் திகைப்பை விளைக்கின்றது. தமிழ் நாட்டுச் சிற்பிகள் கோயிற் கட்டடங்களிலேயே தமது முழுத் திறமையையுங் காட்டியிருக்கின்றனர். அமராவதிச் சித்திரங்களும் மாபலிபுர மலைக் கோயிலும் தமிழ் நாட்டுச் சிற்பிகளின் திறமைக்கு எடுத்துக்காட்டுகளாம். தமிழருடைய சிற்பக்கலை தமிழ் நாட்டிலே தோன்றி வளர்ச்சி அடைந்தது. தமிழர் தமது சிற்பக் கலைக்கு ஆரியருக்காவது வேறெவருக்காவது கடமைப்பட்டவர்களல்லர். தமிழர்

மதில்களாற் சூழப்பட்ட அழகிய நகரங்களில் வாழ்ந்தார்களென்று இருக்கு வேதத்திற் பல இடங்களிற் சொல்லப்படுகின்றது. பாண்டவருக்கு இந்திரப் பிரத்தத்தில் பளிங்குமா மண்டபத்தைக் கட்டி முடித்தவன் மயன் என்னும் திராவிட சிற்பியே என வியாசர் கூறுகின்றார். ஆலயங்களில் வைக்கப்பட்டிருக்கும் பல வகையான கடவுட் சிலைகள் எல்லாம் தமிழ்ச் சிற்பிகளின் கைவேலைகளே.

## ஓவியம்

ஓவியமும் சிற்பமும் ஒன்றோடு ஒன்று நெருங்கிய தொடர்புடையன. நாடக அரங்கில் பயன்படுத்தும் திரைகளும், விதானச் சீலைகளும் பலவகைச் சித்திரங்களோடு கூடியனவாய் இருந்தன. அரசனது அரண்மனைச் சுவர்களில் பல நிறங்களோடுகூடிய ஓவியங்கள் எழுதப்பட்டிருந்தனவென்று சங்கநூல்களிற் சொல்லப்படுகின்றது. அரண்மனையில் சித்திர மண்டபம் என ஓர் மண்டபம் உண்டு. ஆலயங்களிலும், செல்வர்களுடைய மாளிகைகளிலும் அழகிய சித்திரங்கள் எழுதப்பெறுதல் அக்கால வழக்கு. ஆலயங்களின் கோபுரங்களிற் காணப்படும் பலவகையான அழகிய வடிவங்கள் தமிழருடைய ஓவியப் புலமையை விளக்குகின்றன. மொகஞ்சதரோ முத்திரைகளிற் காணப்படும் மனிதர் விலங்குகளின் வடிவங்கள் தமிழரின் 7000 வருடத்துக்கு முற்பட்ட ஓவியப் பயிற்சிக்கு உதாரணமாகும்.

"வேறுபட்ட வினை ஓவத்துவெண் கோயில்" (பட்டினப்பாலை)

"புனை சுவர்ப் பாவையன்ன (நற்றிணை)

"ஓவத்தன்ன வினைபுனை நல்லிற் பாவையன்ன
புலரா மாண்கவின்" (அகம் 98)

# வான ஆராய்ச்சி

தமிழர் வான ஆராய்ச்சியிற் றேர்ந்திருந்தனர். மொகஞ்சதரோவின் முத்திரைகளிற் கிடைத்த குறிப்புகளாற் றமிழர் தொன்மையே வான சாத்திரத்தை நன்கு அறிந்திருந்தனர் எனப் புலனாகின்றது. தமிழர் மிகுதியாகக் கடற் பிரயாணஞ் செய்தனர்* பிரயாண காலங்களில் மாலுமிகள் நட்சத்திரங்களையும் சந்திரனையும் நோக்கித் திசை அறிந்து மரக்கலங்களைச் செலுத்தினர். வானத்தை நோக்கி நேரம் அறிந்து கொள்ளவும் அவர்கள் பயின்றிருந்தனர். சந்திரனது இயக்கத்தைக் கொண்டே அவர்கள் மாதங்களைக் கணக்கிட்டனர். மாதத்துக்கு மதி திங்கள் என்னும் பெயர்கள் வழங்குகின்றன. தமிழ் நாட்டினின்றும் பிரிந்து சென்ற சாலடிய அக்கேடியர்களும் தமிழர் கொண்ட முறையையே கையாண்டனர். சாலடியர் அக்கேடியரின் உற்பத்தியை அறியாத சரித்திராசிரியர்கள் தமிழர் வான சாத்திரத்தைப் பபிலோனியரிடமிருந்து கற்றனர் எனக் கூறியிருக்கின்றனர். தமிழ் நிகண்டு நூல்களில் நாள் கோள் முதலியவற்றுக்குப் பல பெயர்கள் காணப்படுதலின் தமிழர் வானசாத்திர அறிவை நீண்ட நாள்களுக்கு முன்னரே உடையராய் இருந்தனர் என விளங்குகின்றது.

கிரகங்களின் சத்தியால் மனிதனுக்கு நன்மை தீமைகள் உண்டாகின்றனவென்னும் கொள்கை மிகப் பழமையானது. சோதிட ஞானம் தமிழ் நாட்டிற் சரித்திர காலத்துக்குமுன் உண்டானது. விண்மீன் எரிந்து விழுவது சில துக்க சம்பவத்துக்கறிகுறி என்று கருதப்பட்டது. சூரிய, சந்திர கிரகணங்களும் சில தீமைகளுக்கறிகுறி என்று

* உலகு கிளர்ந்தன்ன வுருகெழு வங்கம்

கருதப்பட்டன. கருப்ப மெய்திய பெண்கள் அவற்றை ஒரு போதும் பார்ப்பதில்லை.

தமிழருடைய விழாக்காலங்கள் சூரியனுலேற்படும் பருவ காலங்களையும் சந்திரனுலுண்டாகும் நிலாக்காலங்களை யும் பொறுத்தனவாயிருந்தன. சூரியன் சிங்க இராசியிற் பிர வேசிக்கும்போது அல்லது ஆவணிமாதத்திற் றமிழர்களு டைய புதுவருடம் ஆரம்பமாகி ஆடியில் முடிவடைந்தது. பங்குனி மாதத்தில் விண்மீனென்று எரிந்து வீழ்ந்த தென் றும் ஏழாவது நாள் அரசன் இறந்தானென்றும் கூடலூர் கிழார் புறம் 229-ல் கூறுகின்றார்*. தமிழருடைய கணித முறையே வழக்கிலுள்ள எல்லாக் கணிதங்களிலும் நிதான மானது என டாக்டர் சிலாட்டர் (Dr. Slater) கூறியிருக் கின்றார்.

புலவுத்திரைப் பெருங்கட லீரிடை போழ
விரவு மெல்லையு மசைவின் றாகி
விரை செல லியற்கை வங்கூழாட்டக்
கோடுயர் திணிமண லகன்றுறை மீகான்
மாட வொள்ளெரி மருங்கறிந் தொய்ய
வாள்வினைப் பிரிந்தகாதலர் நாள் பல
கழியாமையே யழிபடரகலவருவர் (அகம் 225)

(இதன் உரை) உலகம் இடம்விட்டுப் பெயர்ந்தாற் போன்ற பெரிய தோணி, புலால் நாறுகின்ற திரையுடைய பெரிய கடலுக் கூடாக நீரைக் கிழித்து இரவும் பகலும் சோர்வின்றி, விரைந்து வீசும் இயற்கை யுடைய காற்று உதைக்கப்போய் மணற்கும்பம் நிறைந்த பெரிய துறையை மீகாமன் பிடிக்க, வெளிச்ச வீட்டின் ஒளியைக் கண்டு பக்கத்தே தங்கும். இவ்வாறு பொருள் தேடுதற் குச் சென்ற நின் தலைவர் பலநாட்கழியமுன் வருவர்.

* இன்றும் "வெள்ளிவிழுவான்" என்று திட்டுதல் வழக்கா யிருக்கின்றது.

"தென்னிந்திய பரதவர் சந்திரனுடைய இயக்கத்தைக் கவனித்துப் பழைய காலத்திற் சந்திர மானமாகக் காலத்தை அளந்தனர். சமவெளிகளிற் பயிரிடும் மக்கள் பருவகாலங்களையும், சூரியனுடைய இயக்கத்தையும் கவனித்தனர். பிராமணர்களின் தொடர்பு ஏற்படுவதன்முன் தமிழர் மிகவும் திருத்தமான வான ஆராய்ச்சி அறிவைப் பெற்றிருந்தனர். வியாழன், இராசி வட்டத்தை ஐந்துமுறை சுற்றி வருதலாகிய அறுபது வருடங்கொண்ட கால அளவை ஆரியருக்குரியதன்று§...என்று மக்லீன் என்னும் ஆசிரியர் கூறுவர்.

"செஞ்ஞாயிற்றினது வீதியும், அஞ்ஞாயிற்றினது இயக்கமும் அவ்வியக்கத்தாற் சூழப்படும் உலகமும், காற்று இயங்கும் திக்கும், ஓராதாரமுமின்றித் தானே நிற்கின்ற ஆகாயமும் என்று சொல்லப்பட்ட இவற்றை ஆண்டாண்டு போய் அளந்தறிந்தவரைப் போல நாளும் இத்துணையவை உடையனவென்று சொல்லும் கல்வியை யுடையோருமுளர்" என்னும் பொருள்பட வரும் புறம் 30-ம் பாடலாலும் பரிபாடலின் பதினோராஞ் செய்யுளாலும் தமிழ் மக்களின் வானநூற் புலமையை அறிக.

## மருந்து

அரசருடைய உறுதிச் சுற்றத்தாருள் ஒருவர் மருத்துவர். சங்ககாலத்துப் புலவர்கள் சிலர் மருத்துவத் தொழிலை மேற்கொண்டனரென்பது மருத்துவன் தாமோதரனார், மருத்துவன் நல்லச்சுதனார் முதலிய பெயர்களால் விளங்கும். * நாடி பார்த்து நோய் அறிதல் தமிழ் வைத்தியத்தின் சிறந்த இயல்பாகும். தற்காலம் வழங்குகின்ற வைத்

§ Manual of administration of the Madras Presidency.
* நாடி இருதயத்துடிப்பைக் காட்டுகின்றது.

திய நூல்களைக் கொண்டு அக்காலம் மருந்துக்கலை மிக விருத்தி அடைந்திருந்ததென அறியலாம். பதார்த்தகுண சிந்தாமணி என்னும் நூல் தமிழர், மூலிகளின் பயன்களை எவ்வளவு தூரம் ஆராய்ந்து கண்டுபிடித்தார்கள் என்பதற்கு உதாரணமாகும். சல்லியகரணி, சந்தானகரணி, சமனிய கரணி, மிருது சஞ்சீவினி முதலிய மருந்துகள் மிகவுஞ் சிறந்தன என்று சிலப்பதிகார உரையிற் சொல்லப்படுகிறது. வள்ளுவனாரும் மருந்து என்னும் ஓர் அதிகாரத்தைத் திருக்குறளுள் வைத்துள்ளார்.

"நோய் நாடி நோய்முத லுநாடி யதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்" [குறள்]

(இதன் பொருள்) மருத்துவனாயினன் நோயாளி மாட்டு நிகழ்கின்ற நோயை அதன் குறிகளால் இன்னதென்று துணிந்து பின், அது வருவதற்குக் காரணத்தை ஆராய்ந்து தெளிந்து, பின் அது தீர்க்கும் உபாயத்தினை அறிந்து அதனைச் செய்யும் வழி பிழையாமற் செய்க.

அலெக்சாந்தர் இந்தியாவுக்கு வந்தபோது இந்தியர் மருந்துக் கலையில் மிகவும் முன்னேறியிருந்ததைக் கண்டு ஆச்சரியப்பட்டார். கிரேக்கர் பாம்புக் கடிக்கு மருந்து அறியாதவர்களாயிருந்தார்கள். இந்தியர் அதனை எளிதாக மாற்றினார்கள் என்று 'அரியன்' (Arrian) என்னும் ஆசிரியர் கூறுகின்றனர். அலக்சாந்தர் திறமையுள்ள இந்திய வைத்தியர்களைத் தனக்கருகில் வைத்துக்கொண்டு பாம்பினாற் கடியுண்டவர்கள் அரச மாளிகையில் சிகிச்சை பெறலாமென விளம்பரஞ் செய்திருந்தானென்று அவனது தளபதியாகிய நீர்ச்சஸ் (Nearchus) என்பவர் கூறி இருக்கின்றார். இது கிறித்துவுக்கு 300 வருடங்களுக்கு முற்பட்ட நிகழ்ச்சி.

# நகர்

நகர் மதிலினாற் சூழப்பட்டிருக்கும். மதிலின் புறத்தே சோலைகளும் ஆலயங்களும் துறவோர் பள்ளிகளும் காணப் படும். நகரின் வாயிலைக் கடந்து செல்லின் அதனைக்காவல் புரிவோர் நெருங்கியுறையும் வீதிகளும், மீன் விலைஞரும், உப்பு வாணிகரும், கள், பிட்டு, அப்பம், வாசனைப்பண்டம், இறைச்சி விற்போர் வசிக்கின்ற வீதிகளும் தோன்றும். இவ்வீதிகளை யடுத்து மட்கலஞ் செயயும் குயவரும், செம்பு வேலை செய்வோர், வெண்கலக்கன்னார், பொற்கொல்லர், தச்சர், மட்பாவை செய்வோர், தையற்காரர், மாலை கட்டு வோர், சோதிடர், பாணர் முதலியோர் தெருக்களும், சங் கறுப்போர் இரத்தினப் பணியாளர் வீதிகளும், நாடகக் கணிகையர் வீதியும், நெல்லுப் புல்லு முதலிய கூலவகை விற்போர் தெருவும், சூதர், மாகதர், வேதாளிகர், பொது மகளிர் தெருக்களும், ஆடை நெய்து விற்போர், பொன் வாணிகர், இரத்தின வியாபாரிகள் வீதிகளும், அந்தணர் அக்கிராகாரமும், இராச வீதியும், மந்திரிகள் வீதியும், பல் வகை அரசாங்க அதிகாரிகள் வாழும் தெருக்களும் அமைந் திருக்கும். இவையேயன்றி யாவரும் வந்து தங்குவதற் குரிய மரத்தடியும், அம்பலமும், முச்சந்திகளும் அருவியோ டும் அழகிய செய்குன்றுகளும் விளங்கும். இவற்றின் மத் தியில் அரசனுடைய அரண்மனை பொன் மயமான மேரு போல் விளங்கும். 'அரண்மனை வட்டமான மதிலினாற் சூழ்ந்திருக்கும். மதில், கோபுரத்தோடு கூடியது. மதிலின் உட்புறத்தே பொய்யாகிய பூமியும், ஏந்திர வாவியும் இள மரச் சோலையும் அந்தப்புர மகளிர் இருக்குமிடமும், ஆயு தச் சாலையும் தானியக் களஞ்சியங்களும், நடந்து செல்லும் பெரிய வாயில்களும், நுழைந்து செல்லும் குறுகிய வாயில்

களும், சபை கூடும் மண்டபமும், நடன சாலைகளும், தேவாலயங்களும், குதிரைப் பந்தியும், யானைப் பந்தியும், படைதங்கு மிடமும் மயில் விளையாடும் 'வெண்ணிறமுடைய செய்குன்றும் இருட்டறையும் காணப்படும்'*

## கோட்டை

நகரைச் சூழ்ந்து மதிலும், மதிலைச் சூழ்ந்து வெள்ளிடை (மணல் பரந்த) நிலமும், வெள்ளிடை நிலத்தைச் சூழ்ந்து அகழும், அகழைச் சூழ்ந்து மலையும், மலையைச் சூழ்ந்து காவற் காடும் அரண் செய்யும். மதில் செங்கட்டி சுண்ணாம்பு முதலியவற்றால் எடுக்கப்பெற்று ஏணிக்கு எட்டாத உயரமும், பகைவர் தகர்க்கமுடியாத திண்மையும், அகத்துள்ளார் மேலே நின்று போர் செய்யக்கூடிய அகலமுமுடையதாயிருந்தது. பெரும்பாலும் அது நாலு குதிரை பூட்டிய தேர்கள் போகவும் வரவுங்கூடிய அகலமுமுடையதா யிருக்கும். பழைய அசீரியார் பாபிலோனியருடைய கோட்டைகள் இவ்வாறிருந்தன. மதிலைச் சுற்றிப் பல வாயில்களும் கோபுரங்களும் இருந்தன. வாயில்களின் நிலைகள் பல வயிர மரங்களை ஒன்று சேர்த்துச் செய்யப்பட்டன. கதவுகள் இரும்பு அள்ளுகளினாற் பெலப்பித்து இரண்டாகச் செய்யப்பட்டன. அவை திரண்ட மரங்களால் உள்ளே தாளிடப்பட்டன. வீரர் மறைந்திருந்து அம்பெய்தற்குரிய பதுக்கிடங்கள் பல, மதிலைச் சூழ விருந்தன. பகைவர்மீது கல்லை வீசுவனவும், உலோகங்களை உருக்கிச் சொரிவனவும், கொதி எண்ணெயை ஊற்றுவனவும், நெருப்பைக் கொட்டுவனவும், அம்புகளை எய்வனவுமாகிய பல வகைப் பொறிகள் மதிலின்மேல் வைக்கப்பட்டிருந்தன. மதிலைச் சூழ்ந்த வெள்ளிடை நிலம் பகைவர் நின்று பொருதற்

* உதயணன் கதை.

கரிதாய் வெப்பமுடையதாய் இருக்கும். இரும்பினாற் செய்யப்பட்ட யானை நெருஞ்சி அதனிடத்தே பரப்பப்பட்டிருக்கும். இதனை அடுத்துள்ள அகழ், மிகுந்த ஆழமும் அகலமுமுடையதாயிருக்கும். மிகுந்த ஆழம் உடைமையின் நீர் நீல மணிபோன்ற தோற்றமுடையதாயிருக்கும். சில அகழ்கள் 40 அடி ஆழம் இருந்தனவென்று சில பழைய சாசனங்களிற் காணப்படுகின்றது. அதனகத்தே பெரிய முதலைகளும் ஆட்களை விழுங்கும் பெரிய மீன்களும் வாழும். நகரிற் பெருகும் கழிநீரெல்லாம் கற்படை (மதகு) வாயிலாக வந்து இவ்வகழிலே விழும். கோட்டை வாயிலினின்றும் வெளியே செல்வதற்கு இவ்வகழ்மீது பலகை போடப்பட்டிருக்கும். போர்க்காலங்களில் இப்பலகை எடுக்கப்படும். அகழின் புறத்தே உள்ள காவற்காடு முள் மரங்கள் பல உடையதாயிருக்கும். அதன் இடையிடையே வாள் இரும்பு முள் முதலியன பதிக்கப் பெற்றிருக்கும். அதனைக் காவல் செய்யும் வேட்டுவர் அரண்கள் அவ்விடத்துண்டு. அகழின் புறத்தே இயற்கையான மலை இல்லையாயின் செயற்கையான மலைகளை அமைத்தல் இயல்பு. மலை வெள்ளிடை நிலம் முதலியன இல்லாத அரண்களுமுண்டு. மதிலின் அகத்தினின்றும் வெளியே செல்லும் கள்ளவழிகளாகிய சுருங்கைகள் பல உண்டு. மதிலின் வாயிலில் பந்தும் பாவையும் தூக்குவதும் அக்காலவழக்கு. இது பகைவர்களைப் பெண்களென்று அவமதித்தற்கு அறிகுறியாகும்.

திருவள்ளுவர் அரணின் தன்மையைத் திருக்குறளில் நன்கு விளக்கியுள்ளார். அது வருமாறு:—

“மணிபோன்ற நீரும், வெள்ளிடை நிலமும் மலையும் குளிர்ந்த நிழலையுடைய காடும், ஏணி எய்தாத உயரமும்

புறத்தார்க்கு அகழலாகா அடி அகலமும், புறத்தோர்க்கு நின்று போர் செய்ய இயலும் தலை அகலமும், செங்கட்டி, கல் முதலியவற்றாற் செய்தமையின் தகர்க்கலாகாத திண்மையும் உடைய மதிலும் உடைய அரண் சிறந்த அரண் எனப்படும். அது, காக்கவேண்டிய இடம் சிறிதாயும், உள்ளே அகன்ற இடமுடையதாயும், அகத்தார் புறத்தார் மேல் அம்பு முதலியவற்றைச் செலுத்திப் போர் செய்தற்குரிய தன்மை யுடையதாயும், அகத்தோர்க்கு வேண்டும் பொருள் எல்லாவற்றையும் உள்ளே உடையதாயும், புறத்தோரால் (மதில்) அழிவெய்தும் எல்லைக் கண் பகைவர் அகத்து எய்தா வகை காக்க வல்ல நல்ல வீரரை யுடையதாயு மிருக்கும். அது, வீரர் உள்ளிருந்து வெளியே செலலாவாறும், வெளியேயிருந்து உள்ளே புகாவாறும் நெருங்கிச் சூழ்ந்து முற்றுகை இட்டும், அங்ஙனம் சூழாது நெகிழ்ந்த விடம் நோக்கி ஒருமுகமாகப் போர் செய்தும், துணிவுடையோரை ஏவிக் கதவினைத் திறந்தும் பகைவர் அகத்தோரைக் கொள்ளுதற் கரிதாயிருக்கும். படைப் பெருமை வல்லவராய் வந்து சூழ்ந்த புறத்தோரை, அகத்தோர், தாம் பற்றிய இடம் விடாது நின்று பொருது வெல்லத்தக்கதும், அகத்தோர் செய்யும் தொழில் வேறுபாட்டால் வீறுபெற்று புறத்தோர் அறியாமற் புகுதல் போதல் செய்தற்குச் சுருங்கை வழி முதலியவுடையதும் சிறந்த அரணாகக் கருதப்படும்.

## முடிவுரை

இற்றைக்கு ஐயாயிரம் ஆண்டுகளின் முன்னரே தமிழ் மக்கள் எகிப்தியர், பாபிலோனியர்களைவிட உயர்ந்த நாகரிகம் எய்தியிருந்தார்கள் என்பதை மொகஞ்சதரோப் புதை பொருள் ஆராய்ச்சி வெளியிடுகின்றது. அக்கால நாக

ரீகம் கற்கால இறுதியிலும் உலோககாலத் தொடக்கத்தி லும் உள்ளதாயினும் அது சங்ககால நாகரிகத்துக்கும் இன் றைய மக்களின் நாகரிகத்துக்கும் எவ்வாற்றானும் தாழ்ந் தன்று. மொகஞ்சதரோப் புதைபொருள் ஆராய்ச்சியும் சங்கநூல் ஆராய்ச்சியும் வெளியிடுவது என்னவென்றால் தமிழ்மக்கள் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே வீழ் நிலை அடையாது உயர்ந்த நாகரிகமுடையவர்களாய் வந் திருக்கிறார்க ளென்பதேயாகும். ஆனமையினாலேயே ஆரியர் கலப்பினாலும் தமிழர் நாகரிகம் மொழி ஆகியன சிதைவுபடவில்லை. இவர்களுடன் கலக்கநேர்ந்த ஆரியர் தாமும் இவர்களின் கலைகளையும் ஒழுக்கங்களையும் வழி பாட்டு முறைகளையும் பின்பற்றுவா ராயினர்.

---

# VI. தமிழர் ஆரியர் கலப்பு

## இப்பொருளுரையின் வரலாறு

இப்பொருள் பற்றிய கட்டுரை இற்றைக்கு முப்பத் தொரு வருடங்களின் முன் பண்டிதர் சவரிராய பிள்ளை அவர்களால் ஆங்கிலத்தில் எழுதப்பெற்று சித்தாந்த தீபிகை என்னும் பத்திரிகையின் நாலாம் ஐந்தாம் புத்த கங்களில் வெளிவந்துள்ளது. இத்துணை ஆண்டுகளுக்கு முன் எழுதப்பட்டபோதும் அக்கட்டுரை புதுமையும் ஆராய்ச்சி நுட்பமும் பெற்று மிளிர்கின்றது. அது தமிழர் வரலாற்றில் மயக்கத்தைக் கொடுக்கும் பலவற்றுக்கு விடை யளிப்பதாயும் விந்தத்துக்கு வடக்கே உள்ள தமிழரின் சரித்திரத்தைக் கூறுவதாயு மிருக்கின்றது. அக்கட்டுரை இதுவரை புத்தக வடிவில் வராமையாலும், சித்தாந்த தீபி கையின் பழைய இதழ்களைத் தேடிப் பெறுதல் மிக அருமையா யிருப்பதினாலும் அவ்வரிய கட்டுரையை

ஆராய்ச்சிகாரர் படித்து மகிழ்தல் அரிதாயிருக்கின்றது. தமிழர் சரித்திரத்தைப் பூரணமாக விளங்கிக்கொள்வதற்கு அக் கட்டுரை இன்றி அமையாததா யிருக்கின்றமையின் அதனைச் சுருக்கித் தமிழிற் றருகின்றேம்.

ஆசிரியர் கட்டுரை எழுதுகின்ற காலத்தில் மொகஞ்சதரோ, ஹரப்பா, நால் முதலிய விடங்களின் புதை பொருள்கள் அகப்படவில்லை. தமிழருக்கும் அசிரியர் பாபிலோனியர் சுமேரியருக்கு மிடையிலுள்ள தொடர்பைக் கவனித்த ஆசிரியர், சுமேரியரே தமிழ்நாட்டில் வந்து குடியேறினர் எனத் தமது கட்டுரையிற் கூறி இருக்கின்றனர். சமீபகாலத்திற் கிடைத்த பல ஆதாரங்களைக் கொண்டு தமிழரே சுமேரியாவுக்குச் சென்று குடியேறினர் என்னும் கொள்கை தாபிக்கப்பட்டுள்ளது *. தமிழர் சுமேரியாவினின்றும் வந்தவர்கள் என்று பொருள்படவரும் பகுதிகளை மாற்றியுள்ளோம்.

சுமேரியர், சுமேரியாவின் பூர்வகுடிகளல்லர் என்றும் அவர்கள் புதிதாகக் கிழக்குத் திசையினின்றும் வந்து குடியேறியவர்களென்றும் "சரித்திராசிரியர்களின் சரித்திரம்" என்னும் நூல் கூறுகின்றது†. டாக்டர் ஹால் (Dr. Hall)

* Fr Heras: G. R. Hunter முதலியோர் இக் கருத்தை நன்கு ஆராய்ந்து கூறியுள்ளார்கள்.

† "Whence, then, did the Sumerians originally come, before they took possession of the swarmpy Euphrates valley and settled there?

There is a word in Sumerian, "Kar" (Turkish yer) which means country (as does the Turkish, word). But in Sumerian it has also come to signify 'mountain and likewise 'east' (since the mountains lie only in the east of Babylonia) meanings which the Turkish

என்னும் ஆசிரியர், சுமேரியர் சிந்து நாட்டினின்றும் பாபிலோனுக்குச் சென்றவர்களாகக் காணப்படுகின்றனர் எனக் 'கிட்டிய கிழக்குத் தேசங்களின் பழைய வரலாறு,' என்னும் நூலிற் கூறியிருக்கின்றனர். † பாபிலோனியர் அசீரியர் என்னும் சாதியார்களும் கிழக்குத் தேசங்களினின்றும் வந்து கி. மு. 500. ஆண்டுகளுக்கு முன் குடியேறினவர்களே என்று சரித்திரக்காரர் கூறுகின்றனர்.*

சுமேரியர் சிந்து நதியை அடுத்த நாடுகளினின்று சென்றவர்கள் ஆவர் எனக் கருதப்படுகின்றனர். சிந்துநதிதீர மக்கள் அக்காலத்திற் குதிரையைப்பற்றி அறியார்கள் எனச் சரித்திரக்காரர் கூறுவது சரியாயிருக்கலாம். சங்க இலக்கியங்களிற் கழுதைகளில் ஆட்கள் ஏறிச் செல்வதைப் பற்றிக் கூறப்படுகின்றது. கோவேறு கழுதை என்னும் சொல்

---

word does not bear. This is, therefore, a clear indication that, even after the Sumerians had settled in Babylonia, the range of the Median frontier and what lay behind it always passed with them for their true country, the original home whence they had come. There is also extreme significance in the fact that they were originally unacquainted with both the lion and the horse, as also wine with vine, and the palm tree, for they had no names for them, and called the lion 'great dog' (nug magh) the horse 'ass of the mountains, or of the east' wine the 'drink of life' (Gish-tin, from gash-tin) and the palm 'tree of magan', (mis-magan) or 'the upright' (Historians, History of the world Vol. I pp. 343, 4.

† The ancient history of the near east pp. 173—4.

* "The Babylonians and Assyrians must have separated from the common stock in some part of Central Asia where the lion was indigenous, and emigrated

லால் மிகப்பழைய காலத்தில அரசரும் கழுதையில் ஏறிச் சென்றார்கள் எனக் கருத இடமுண்டு.

இச் சந்தர்ப்பத்தில் எகிப்திய பினீசியர்களின் உற்பத்தியைக் குறித்துச் சரித்திர நிபுணர்கள் கொண்டுள்ள அபிப்பிராயத்தையும் குறிப்பிடுகின்றேம். பிளின்டேர்ஸ் பெற்றி என்னும் பேராசிரியர் எகிப்தியரும் பினீசியரும் ஒரே உற்பத்தியைச் சேர்ந்தவர்களென்றும் அவர்கள் பண்டு நாட்டினின்றும் வந்து குடியேறினவர்கள் என்றும் சாதித்திருக்கின்றனர்.† ஹீறென் என்னும் ஆசிரியர், எகிப்தியர் தமிழர்களுடைய மண்டை ஓட்டின் அளவு சரியாயிருத்தலைக் காட்டி, எகிப்தியரின் இந்திய உற்பத்தியை நாட்டியிருக்

---

into northern Babylonia through one of the passes of the Medio-Elamite range no later than the fifth millennium B. C. The rest however came by way of the southern shore of the Caspian sea—probably towards the end of the fourth millenium and at the events later than the Hamites of Northern Babylonia—and entered what was Aramaean Mesopotamia from the north, then occupied it, and spread gradually from thence to Syria, Palestine, and Arabia. So, by subsequent offshoots and migrations, they became the Aramaeans, Canaanites and Arabs (Historians' History of the world. Vol. 1 P. 347.)

I Havell. என்னும் ஆசிரியர் இந்தியாவில் ஆரியரின் ஆட்சி என்னும் நூலில் (ப 50) சுமேரியர் இந்தியாவினின்றும் வந்த திராவிடர் எனக் கூறியுள்ளார்.

† One of the most recent authorities, Prof. Flinders Petrie, inclines to the opinion that the Egyptians were of common origin with the Phoenicians, and that they have come into the Nile region from the land of Punt, across the Red Sea (H. H. of the world P. 77.)

கின்றனர்.‡ 'பண்டு' என்பது பாண்டிய நாடன்றி வேறு இடமன்று என டாக்டர் அபினஸ் சந்திரதாஸ் என்னும் ஆசிரியர் 'இருக்குவேத இந்தியா' என்னும் நூலிற் தாபித்திருக்கின்றனர்.* 'பண்டு என்னும் நாடு, மலைகளும் பள்ளத்தாக்குகளும், கருங்காலி, வாசனையுள்ள மரங்கள், தெங்கு, வாசனைப்பொருள்கள், சிறுத்தை, புலி, நாய்த்தலையுள்ள குரங்கு, நீண்டவாலுள்ள மந்தி, விசித்திரமான பட்சிகள், ஆலயங்கள் நிறைந்த நாடு எனக் கருதப்பட்டது.¶ 'பன்ற்' என்பது அராபியாவுக்குச் சமீபத்திலுள்ள சொமாலிலந்து என்று கருதப்பட்டது. எகிப்தியருக்கும் தமிழருக்கும் பழைய வியாபாரத் தொடர்பு இருந்ததோடு இருவரின் பழக்கவழக்கம் தோற்றம் வடிவம் ஆதியனவும் ஒத்திருத்தலின் 'பன்ற்' என்பது தென்னிந்தியாவிலுள்ள பாண்டி நாட்டையே ஆமென்பது தெளிவாகின்றது.

## தமிழர் ஆரியர் கலப்பு

ஆரிய தேசத்தினின்றும் வந்த அலைந்து திரியும் ஒரு கூட்டத்தினர் இற்றைக்கு நாலாயிரம் ஆண்டுகளுக்கு

‡ Among the earlier students of the subject, Heeren was prominent in pointing out an alleged analogy between the form of skull of the Egyptian and that of the Indian races. He beliveed in the indian origin of the Egyptians. (Ibid. P. 77).

* This part of india could have been no other than the Malabar coast peopled by the Pandyas which was probably called the land of the Pandias afterwards corrupted in Egypt into the land of Punt. (Rig Vedic India—Dr. Abinas Chandra Das.)

¶ Under the name of Punt, the ancient inhabitants of Kamat understood a distant country, washed by the great sea full of valleys and hills

முன் சிந்துநதிக்கரையிற் குடியேறினர். ஆரியர் என்னும் சொலலுக்குப் பிரபுத்தனம் என்னும் பொருள் பிற்காலத்திற் கொடுக்கப்பட்டதாயினும் அதற்கு அவர் மொழியில் மிலேச்சர் என்பதே பொருளாகும். இப்புதிய மக்கள் எங்கிருந்து வந்தார்கள்? இப்பாரத பூமியிலுள்ள ஒவ்வொரு உயிருள்ள பிராணியும் இப்பூமிக்கே சொந்தமானது என்று எமது முன்னோர் நம்பினர். மொழி ஆராய்ச்சியால் ஒவ்வொரு மனிதக்கூட்டத்தின் உற்பத்தித் தானத்தையும் அறிந்துகொள்ளுதல் இலகுவாயிருக்கின்றது. ஒரு சாதியாரின் சரித்திரத் தொடர்பும், சரித்திரத்திற்குரிய ஆதாரமும் எங்கு நின்று விடுகின்றனவோ அவ்விடத்து, மொழி, சரித்திரகாலத்துக்கு முற்பட்ட அவர் வரலாற்றையும், அவர் பிரிவதற்குமுன் வாழ்ந்த பொது இடத்தையும் அறிவிக்கின்றது.

சிந்துநதி தீரத்திற் புதிதாய வந்து குடியேறிய புதிய மக்களின் மொழி, ஆராய்ச்சி, அவர்களின் உற்பத்தியைப் பாரத பூமிக்கு அப்பால் கஸ்பியன், ஆரற் கடல்களை அடுத்த நாடுகளுக்குக் கொண்டுபோய் நம்மை விடுகின்றது. ஆரற் கடலோடு ஒருகாலத்து இணைக்கப்பட்டுக் கிடந்த கஸ்பியன் கடலும் தெற்கே கிடந்த வனுங்கரமும் இம்மக்களை நாகரீகத்தில் முதிர்ந்த பாபிலோனியரோடு கலந்துகொள்

rich in ebony and other valueable woods in incense balsum, precious metals and stones, rich also in animals, for there are cameleopards, cheetas, panthers, dogheaded apes and long tailed monkeys. Winged creatures with strange feathers flew up to the boughs of wonderful trees, specially of the incense tree and the cocoanut palm". "According to the old dim legend, the land of Punt was the premeval dwelling of the gods (H. H. of the world Vol I P. 108.).

ளாதபடி தடுத்தன. தமது நாட்டினின்றும் கிளம்பிய ஒரு கூட்டத்தினர் நீண்டகாலம் தென்கிழக்காக அலைந்து திரிந்தனர். பின் தெற்கு நோக்கிச் சென்று சிந்து நதியின் மேற்குக் கரையிற் குடியேறினர். ஆரியர் சிந்துநதி தீரத்தில் வந்து கி.மு. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் குடியேறினார்களென்பது மேல் நாட்டு ஆசிரியர்களுடைய கொள்கை.

ஆரியர் சிந்துநதி தீரத்தில் வந்து முதன் முதற் குடியேறும்போது குமரி முதல் இமயம் வரையில் நாகரிகத்தில் முதிர்ந்த ஒரே இன மக்கள் குடியேறியிருந்தனர். பரதர் என்னும் இப் பூர்வசாதியார் குடியேறி யிருந்தமையின் இந்நாடு 'பாரத வருடம்' என்னும் பெயர் பெற்றது என்று விட்டுணு புராணங் கூறுகின்றது. இந்தியா முழுமையும் பரதர்வசம் இருந்தது. பரதர் என்னும் சொல், உச்சரிப்பு வேறுபாட்டால்; பிற்காலத்துப் பல மாறுதல்களடைந்தது இந்துஸ்தானத்தில் இருந்தோர் 'கோடர்' என்றும் தக்கணத்தில் வாழ்ந்தோர் திராவிடர் என்றும் அழைக்கப் பட்டனர்.

பரதவர் என்னும் பெயர் மலையைக்குறிக்கும் 'பார்' என்னுமடியாகப் பிறந்ததென்பர் டாக்டர் ஒப்போட் அவர்கள். பார் என்பதின் ஆதிப் பொருள் மலை என்பதை ஒத்துக்கொள்ளவேண்டி யிருக்கின்றது. தமிழருடைய ஆதி இடம் மலையாகவே இருந்தது. பழைய தமிழ்நாட்டு அரசனுக்குச் சிறப்பாக ஒரு மலை உரியதாயிருந்தது. இது அவனுடைய முன்னோர் மலையிலுள்ளவர்கள் என்பதை ஞாபகப்படுத்துகின்றது. தமிழ்க் கடவுளாகிய முருகனது இருப்பிடங்கள் மலைகளாகக் காணப்படுகின்றன. அக் கடவுள் மலை உச்சிகளில் வணங்கப்படுகின்றனர். தமிழ்

மக்களின் காதல், அரசியல்களைக் கூறும் அகப்பொருள் புறப்பொருள் நூல்கள் அவர்களுடைய பழைய பழக்க வழக்கங்களை விரித்துக் கூறுகின்றன. தலைவனும் தலைவியும் சந்தித்துக் காதலிக்கும் காட்சி மலையிடமாயிருந்தது. போரின் ஆரம்பமாகிய நிரைகவர்தலும் மலையை அடுத்த நிலங்களில் நிகழ்ந்தது. இவற்றால் தமிழரின் உற்பத்தி ஏதோ மலையிடமென்று தெளிவாகின்றது. தமிழர் தமது உற்பத்தித்தானத்திலல்லாமல் குடியேறிய நாட்டிலும் சலப்பிரளயம் சம்பந்தமாகவும் மலையையே கொண்டனர். மனுவென்னும் திராவிட அரசனின் பேழை மலயக்குன்றிற் றங்கியதென்றும், அவர் பேழையை விட்டிறங்கி மலயத்தின் ஓர் இடத்தில் மக்களின் நன்மைக்காகக் கடுந்தவஞ் செய்தாரென்றும மச்ச புராணங் கூறுகின்றது. முற்காலத்தவர்கள் பல காரணங்களை முன்னிட்டு மலைகளையும் உயர்ந்த இடங்களையும் வாழும் இடங்களாகக் கொண்டனர்.

சமவெளிகள் முற்றாகக் குடியேறப் பெறுவிட்டாலும் பயமில்லாமல் வாழக்கூடிய இடங்கள் மலையே. ஆரியர் அல்லாத எல்லாச் சாதியாரும் துரானிய வகுப்பைச் சேர்ந்தவர்களென்றும் அவர்களின் உற்பத்தி அத்லாந்திக் மலைகளென்றும் ஒரு காலத்திற் கருதப்பட்டது. டாக்டர் கடல்வேல், திராவிடர் துரானிய வகுப்பினரென்றும் அவர்கள் மத்திய ஆசியாவினின்றும், தெற்கே வந்து இந்துஸ்தானத்திற் குடியேறினார்களென்றும், அவர்கள் ஆரியரால் வென்று தெற்கே துரத்தப்பட்டார்களென்றும் அவர்களே தென்னிந்தியாவிற் காணப்படும் தமிழர் என்றும் கூறியுள்ளார். இக் கொள்கையைச் சாதிப்பதற்கு அடிப்படையான ஆதாரம் எதுவுமில்லை.

தென்னிந்திய மாறவமிசமும் வட இந்திய பரதவமிசமும் ஒரே காலத்தில் இருந்தன. மாறவமிசம் பரதவமிசத்

துக்கு முற்பட்டதெனக் கூறலாம். தமிழரின் உற்பத்தி இடம் மத்திய ஆசியாவல்ல அன்று இந்திய நாடே.§

எல்லத்திலுள்ள பழைய அக்கேடியரோடும் சாலடிய ரோடும் ஒற்றுமையுடைய தமிழர், உலகில் முதற்கண் சீர் திருத்தமுற்ற சாதியாராவர். அக்கேடியர், சாலடியரின் கி. மு. 4000 ஆண்டுகளுக்கு அப்பாற்பட்ட இலக்கியங்கள் சிறிது சிறிதாக வெளிவருகின்றன. அவற்றுட் பல இன்னும் நிலத்துட் புதைந்து கிடக்கின்றன. இத்தாலியிற் பழைய எற்றாஸ்கனியரும், கங்கேரி மக்களும் பின்லன்தில் பின்னியரும் கிழக்குத் தேசத் தமிழரின் பிரிவினராவர்.

எகிப்தியர் தெற்கே, வாழ்ந்த தமிழர்களாகிய பரதரைப் பாண்டு என்று அழைத்தனர். பரதர் வாழ்ந்த பாண்டுநாடு மிகப் பரிசுத்த முடையதாக எகிப்தியராற் கருதப்பட்டது.

சிந்து நதியின் மேற்குக் கரையில் ஆதியில் வந்து குடியேறிய ஆரியர் பாரத நாடு சீர்திருத்தமடைந்திருப்பதையும், அது வலிய அரசரால் நன்கு ஆளப்படுவதையும் கண்டனர்.† இருக்குவேத பாடல்கள் அவர்களுடைய தொண்ணூறு கோட்டைகளையும் ஏழு வலிய அரண்களைப் பற்றியும் கூறுகின்றன. இவைகள் பஞ்சாப்பில் இருந்தனவாகலாம்.

ஆரியர் வருகைக்கு முற்பட்ட இந்திய அரசர் பரதர் எனப்பட்டனர். இருபது அரசரையுடைய இப்பரம்பரை

§ தமிழரே சிந்து நாட்டினின்று பாரசீகம் வழியாகவும் கடல் வழியாகவும் சென்று பாபிலோனிற் குடியேறினார்கள். பல வேறு காலங்களில் தமிழர் சுமேரியாவிலும், சுமேரியர் தமிழ் நாட்டிலும் சென்று குடியேறுவாராயினர்.

† மொகஞ்சதரோப்புதை பொருள் ஆராய்ச்சி தமிழரின் ஆரியர் வருகைக்கு முற்பட்ட உயர்ந்த நாகரிகத்தை நன்கு வெளியிடுகின்றது.

ஐந்து நூற்றாண்டுகளாவது ஆட்சிபுரிந்து ஆரியர் வருகைக்கு முன் வீழ்ச்சி அடைந்திருக்கவேண்டும். இவர்களுக்குப் பின் இன்னொரு சந்ததியார் ஆண்டனர். இவர்களை ஆரியர் அசுரர் என்றழைத்தனர். அசுரர் என்பதற்கு இறைவன் என்பது பொருள். இது அரசு என்னும் தமிழ்ப் பதத்தின் உச்சரிப்பு வேறுபாடு எனக்கருத இடமுண்டு. இருக்கு வேதத்தில் அசுரர் என்னுஞ் சொல் பெருமை அல்லது வலிமை என்னும் பண்பைக் குறிக்கின்றது; இருக்குவேதத்தின் பத்தாம் மண்டிலத்தைத் தவிர மற்ற இடங்களிலெல்லாம் கடவுளைக் குறிக்கப் பயன்படுத்தப் பட்டிருக்கின்றது. இவ்வுண்மையைத் **தத்தர்** பழைய இந்தியா என்னும் நூலின் 201-ம் பக்கத்தில் விளக்கியிருக்கின்றார். பிரமாணங்களில் இச்சொல் வேறு பொருளில் வழங்கப்பட்டிருக்கின்றது. அங்கு கடவுளின் பகைவரைக் குறிப்பதற்கு உபயோகிக்கப் படுகின்றது.

சமக்கிருதத்தில் அரசனைக் குறிக்கும் 'ராயன்' என்னும் சொல் அரசு என்னும் சொல்லின் உச்சரிப்பு வேறுபாடு. அரசன் என்பதற்குச் சரியான சமக்கிருத பதம் பதி. இது விஸ்பதி (இராயனல்லாதவன்) என இவ்வாறு வரும் சொற்களால் அறியப்படும். தமிழ் இறை, உச்சரிப்பு முறையாக, எகிப்திய 'றெ' என்னும் சூரியனைக் குறிக்கும். 'றெ' என்னுஞ் சொல்லோடு உரோமானியருடைய 'றெக்ஸ்' 'றேய்' என்னும் சொற்கள் ஒற்றுமையுடையன. ரோமனியருடைய 'றெ' என்பதை மூலமாகக் கொண்டு இச்சொற்கள் பொது உற்பத்திக்குரியன வென்று துணிந்து கூறலாம்.

சிந்துநதி தீரத்திற் குடியேறினோர் படை யெடுத்து வந்தோரல்லர். அவர்கள் ஆடு மாடுகளுடன் புற்றரைகளை நாடி அலைந்து திரிந்த சாந்தமானவர்களே. விருந்தினரை வர

வேற்று ஓம்புவது தமிழரின் இயற்கைப் பண்பு. அரசர் அன்னியருக்கு அன்பும் தயவுங் காட்டினர். பயிரிடாது விடு நிலமாய்க் கிடந்த நிலங்களைத் திருத்திப் பயிரிடுமாறு புதிய மக்கள் அனுமதிக்கப் பட்டனர். புதிதாக வந்தவர் களுக்கும் அரசாட்சியாருக்கு மிடையில் போர்கள் நிகழ்ந் தன. ஆரியருடன் போர் புரிந்தவர்கள் இருக்கு வேதத்தில் தாசுக்கள் என்றழைக்கப்படுகின்றனர். தாசுக்கள் என்பதற் குச் சத்துராதிகள் என்பது பொருள். வேத பாடல்கள் இவர்கள் மூக்கில்லாதவர்கள், கடவுள் இல்லாதவர்கள் என்று கூறுகின்றன.

தத்தர் புதிதாக ஒன்றையும் ஆராய்ந்து கூறாது ஐரோப் பிய வரலாற்றாசிரியர்கள் எழுதியவற்றையே திரட்டி அழ கான நடையில் எழுதியிருக்கின்றனர்; ஆரியப் பிராமண ருக்கு ஞானம் போதித்த இராமானுசர், பகவத் கீதையின் ஆசிரியராகிய கண்ணன், கீழ்த்திசையில் ஞானத்தை உதிப் பித்த புத்தர் ஆதியோர் யாவர் என ஆராயவில்லை. ஆரியர் பாரத பூமியில் ஒவ்வொரு அடியையும் வெற்றியினாலேயே முன்னுக்கு வைத்தார்கள் என்று கூறும் அவர் கூற்றில் ஏதும் உண்மை இருப்பதாகத் தெரியவில்லை. ஆரியர் தென் னிந்தியரை கி. மு. பத்தாம் நூற்றாண்டில் வெற்றி பெற்றார் எனக் கூறும் அவர் கூற்று உண்மையிலிருந்து வெகுதூரம். அக்காலத்துக்கு முற்பட்ட ஆரியர், உபநிடதங்கள் எழுதப் படுகின்ற காலத்துச் சமயஞானங்களை விசாரித்தறிவதற்குத் தெற்கே வந்தார்கள் என்பது உண்மையே. அதன் விளை வாக உபநிடதங்களுக்குப் பின் எழுதப்பட்ட சூத்திரங்கள் தென்னிந்தியாவில் எழுதப்பட்டன. சூத்திரங்களுக்கு உரை எழுதிய போதாயனரும் அபஸ்தம்பரும் முறையே கி. மு. 5, 6-ம் நூற்றாண்டில் விளங்கியவர்கள். இவர்கள்

கோதாவரி கிருஷ்ணாநதிகளுக்கிடையே உள்ள ஆந்திர தேசக் கலைஞானக் கொள்கைகளைப் பின்பற்றிய தமிழர். சமக்கிருதத்தையும் சமக்கிருத வரலாற்றையும் படித்து இந்து நாகரிகத்தை அறிந்து கொள்ளமுடியாது. முறையான ஆராய்ச்சி செய்யும் சரித்திரக்காரர், கிருஷ்ணா, காவேரி, வையை முதலிய ஆறுகள் பாய்கின்ற நாடுகளைப் பற்றி அறிந்துகொண்டபின் தான் கங்காநதியை அடுத்தநாடுகளைப் பற்றி ஆராயவேண்டும்" என்று பேராசிரியர் சுந்தரம்பிள்ளை அவர்கள் ஓரிடத்துக் குறிப்பிட்டிருக்கின்றனர்.

இனிப் பொருளில் செல்வோம். ஆரியர் சிந்து நதிக்கரையிற் குடியேறினது முதல் (கி. மு. 2000 முதல் 1400) வரையுமுள்ள அவர்களின் வேதபாடல்கள் தொகுக்கப்பட்டதை அறிந்து கொண்டோம். வேதபாடல்கள் பாடி முடிவதற்கு 600 ஆண்டுகள் பிடித்திருக்கின்றன. அப் பாடல்களால், ஆரியர் நாட்டின் கரை வழியாகச் சென்றும், சில சமயங்களிற் படை எடுத்தும் பஞ்சாப் முழுவதையும் கைப்பற்றி யிருந்தார்களென அறிகின்றோம். இரு சாதியாருக்கிடையிலும் நட்பு முறையான தொடர்பு ஏற்பட்டிருத்தல் கூடும். புதிதாக வேறிடங்களுக்குச் சென்று வாழும் மக்களிடையே இவ்வகையான நிகழ்ச்சி ஏற்படுவது இயல்பு. திருமணம் கலப்பினால் இரு சாதியார்களும் ஒன்றுபோற் சேர்ந்து பலமடைந்தனர். ஐந்து ஆறுகள் பாயும் நாட்டிலுள்ளவர்கள் கலப்பில்லாத சாதியாரென வெளி உலகிற் சொல்லப்பட்டாலும் அவர்கள் ஒரே இனத்தைச் சேர்ந்த ஆரியக்குழுவினர் என்று நம்பமுடியாது. புராண வரலாறுகளாலும், பிராமணருடைய கன்னபரம்பரை வரலாற்றாலும் பஞ்சாப்பின் பூர்வ மக்கள் எட்டு வெவ்வேறு கூட்டத்தைச் சேர்ந்தவர்களென்று விளங்குகின்றது. அவருள் மூன்றில்

ஒரு பகுதியினர் ஒரே இனத்தைச் சேர்ந்தவர்கள் என்று ஆராய்ந்து கூறலாம். ஓரினத்தைச் சேர்ந்த அத்திரி, கண்ணுவர், விசுவாமித்திரர் என்னும் மூன்று வமிசத்தினரும் தமிழர் அல்லது பரதவராவர். பிராமணர் என்று கருதப் பட்டவருட் பலர் தமிழ் வகுப்பைச் சார்ந்தவர். பழைய காலத்திற் சாதித் தடை இருக்கவில்லை. கலப்பு மணங்கள் நடைபெற்றன. முன் இருந்தவர்களும் புதியவர்களும் கலந்தமையினால் வலிமை ஏற்பட்டது. அரசாங்கம் பலப் பட்டது. உலகசரித்திரத்தில் இம் முறை புதுமையான தன்று.

இரானியர் என்னும் ஆரியரின் கிழக்குப் பிரிவினர் பாரசீகத்தை அடைந்து அங்கு வாழ்ந்த பாரசீகரோடு கலந்து ஒன்றுபட்டனர்.

டெல்கிக்கு அண்மையில் கங்காநதி தீரத்திலிருந்த அத்தினபுரியாகிய தமிழர் இராச்சியத்தால் ஆரியரின் வளர்ச்சி பஞ்சாபிற்கு வெளியிற் செல்லாமல் தடைபட் டது. பாஞ்சாலம், கோசலம், விதேகம் விஸ்வல, மதுரை, மகதம், மாளவம் முதலியன தமிழருடைய மற்றைய இராச் சியங்களுட் பிரதானமானவை. இத்தேசங்கள் இமயமலை விந்தமலை கிழக்கு மேற்குக் கடல் ஆகிய எல்லைகளின் இடையே கிடந்தன. பரசீகக் கரையிலுள்ள நாடுகள் அத்தினபுரத்தரசனுக்குத் திறை அளித்தன. இது பாரத யுத்த காலம் வரையும் நடைபெற்றது. அம்பல்லா என்னு மிடத்துக்கு 26 மையில் தொலைவிலுள்ள தனேஷ்வா என் னும் இடத்தில் கி. மு. 14-ம் நூற்றாண்டில் பாரத யுத்தம் நேர்ந்தது. குரு, பாண்டவா என்னும் ஒரே குடும்பத்தினருக் கிடையில் இப்போர் நிகழ்ந்தாலும் பாரத பூமியிலுள்ள அரசர் எல்லோரும் ஒவ்வோர் பக்கத்தைச் சேர்ந்து போர்

செய்திருக்கின்றனர். இப்போர் வடக்கே இருந்த இராச்சியங்களுக்குத் தலை அடியாயிருந்தது. சிறு இராச்சியங்கள் சுயேச்சை பெற்றன. பஞ்சாப்பில் அடைபட்டிருந்த ஆரியருக்கு வழி திறந்தது. சொகுசான வாழ்க்கையால் தமிழர் போர் செய்யும் வீரத்தை இழந்தனர்.

இவ்விபரங்களை இருக்கு வேதத்திற் காணலாம். இருக்கு வேதம் பஞ்சாப் கபூல் என்னும் இரு இடங்களைப் பற்றிச் சொல்லுகின்றது. சொல்லப்பட்டவற்றுள் கங்கா நதியும் யமுனையும் அருமையாகக் கூறப்படுகின்றன. ஆகவே பஞ்சாப்பிலிருந்த ஆரியர் அவற்றை நன்கறிந்திருக்கவில்லை என்று விளங்குகின்றது. அப்பொழுது ஆரியர், வானம், விண், புயல், இடி முதலிய இயற்கைப் பொருள்களை வணங்கினர். மிருகபலி கொடுத்தனர். அவர்கள் சமயச்சடங்குகளும் யாகங்களும் புரியுமிடங்கள் சிந்துநதிக்கரையும் அதின்கிளைகளும் சரசுவதி நதியுமா யிருந்தன. அவர்கள் தமிழர்க்குரிய சிவவணக்கத்தையும் சமயக்கொள்கையையும் அறியாதவர்களா யிருந்தனர்.

பழைய வேதபாடல்களில் சிவனைப்பற்றிச் சொல்லப் படவில்லை என முதன் முதற் கூறியவர் டாக்டர் ஸ்டிபின் ஆவர். உருத்திரன், அக்கினி என்று சொல்லப்பட்டாலும் அக்கினியையும் உருத்திரனையும் சிவன் என்று கூறமுடியாது. தக்கன் சிவனை யாகத் துக்கு அழைக்கவில்லையென்றும் ஆனல் பதினொரு உருத்திரரும் யாகத்துக்குச் சென்றிருந்தனர் என்றும் சொல்லப்படுகின்றன. சிவன் தமிழர் கடவுள். அவர் இரண்டு வகையான வழிபாட்டுக்குரியர். ஒன்று கண்ணுக்குப் புலப்படாத தியான வடிவம். ஒன்று கண்ணுக்குப் புலப்படும் இலிங்கவடிவம். பூவும் புகையுங் கொண்டு கடவுளை வழிபடுதல் தமிழரின் பழையமுறை.

பூ இதயத்தையும், புகை அது இளகுவதையும் குறிக்கும். இலங்கை அரசனும் இராவணீயம் என்னும் இசை நூல் செய்தவனுமாகிய இராவணன் பொன் இலிங்க மொன்றைத் தன்னுடன் கொண்டு திரிந்து பூவும் புகையும் கொண்டு வழிபட்டான். இராவணன் மாத்திரமல்லன், வாணன் வாலி முதலாயினோரும் தமிழ் முனிவர்களும் சிவ வணக்கத்துக்குரியோராவர். அவர்கள் சிவனைத் தியான வடிவாகவும் மூர்த்தி வடிவாகவும் வழிபட்டனர். தமிழர் மதத்தை இன்னும் பின்பற்றாத பஞ்சாப்பிலுள்ள ஆரியர் சிவ வழிபாட்டை அறியாதிருந்தனர். ஆரியருக்கும் தமிழருக்கும் பகை ஏற்பட்டால் அது சமயத்தைப் பொறுத்ததாயிருந்தது. ஆரியருடைய தெய்வங்கள் கீழாக மதிக்கப்பட்டதோடு அவர்கள் புரியும் யாகங்களும் அழிக்கப்பட்டன. இக் காரணத்தினாலேயே, உயர்ந்தோரைக் குறிக்கும் அசுரர் என்னுஞ் சொல் தேவர்களின் எதிரிகள் எனனும் பொருளைக் குறிக்க இருக்கு வேதத்தின் பத்தாம் மண்டிலத்திலும் பிரமாணங்களிலும் வழங்கப்பட்டிருக்கின்றது. ஆரியருடைய இயற்கை வணக்கத்தோடு தமிழருடைய உயர்ந்த வழிபாட்டு முறைகளை ஒப்பிட்டுப் பார்க்குமிடத்துப் பின்னவை மிகச் சிறந்தன வென்று எவர் மனதிலும் படுதல் இயல்பு. ஆரியர் தங்கள் கடவுளைப் பிரகாசமுள்ளவன் என்னும் பொருளில் தேவன் என்றழைத்தனர்; தமிழர் எல்லாவற்றையும் கடந்த பொருள் என்னும் பொருளில் கடவுள் என வழங்கினர். சிவம் என்னும் சொல் சிவ என்னும் அடியாகப்பிறந்து நல்லது இனியது அழகியது முதலிய பொருள்களைக் கொடுக்கும்.

ஆரியர் இந்தியாவை அடைந்த பின் முதலிற் பாடிய நூல் இருக்குவேத சங்கிதை என்பதை இந்திய சரித்திரா

சிரியர்கள் எல்லோரும் ஒப்புக்கொள்கின்றனர். பஞ்சாப்பில் வாழ்ந்த கலப்புச் சாதியினர் 'சுற்லெஸ்' என்னும் நதியை இன்னும் தாண்டவில்லையென்றும், அவ்வாற்றுக்கு அப்பால் அவர்கள் வாழ்ந்ததைப் பற்றி அவர்கள் வேத பாடல்கள் கூறவில்லை யென்றும் முன் ஓரிடத்திற் குறிப்பிட்டுள்ளோம்.

ஆகவே, கி.மு. 2000 முதல் 1400 வரையுமுள்ள 600 வருடங்களிலும் அவர்கள் பஞ்சாப் கபூல் காந்தாரம் முதலிய நாடுகளில் வாழ்ந்தார்களென்று தெளிவாகப் புலப்படுகின்றது. ஆரியர் குடியேறி வாழ்ந்த நாட்டுக்கு எதிர்ப்புறத்தில் வாழ்ந்த மக்கள் ஆரியரோடு கலக்கவில்லை என்பதும், அவர்கள் முற்றாக வேறு கூட்டத்தினராயிருந்தனர் என்பதுமே இதனாற் பெறப்படுகின்ற பிரதான தீர்மானமாகும். அக்கூட்டத்தினர் முன் நாம் கூறிய தமிழர் அல்லது பரதர் ஆவர்.

பிராமணங்கள், ஆரணியகங்கள் உபநிடதங்கள் ஆதியன கி. மு. 1400 முதல் கி. மு. 10-ம் நூற்றாண்டு வரையிலும் செய்யப்பட்டன. இவ்விரண்டாங்காலப் பகுதியிற் செய்த நூல்கள் மாத்திரம் கங்கைக்கரைப்பள்ளத்தாக்குகளில் வாழ்ந்த, குரு, பாஞ்சால, காசி, கோசல, விதேகர்களைப் பற்றிச் சொல்லுகின்றன. பாரதயுத்தத்தில் சிறு இராச்சியங்கள் சுயேச்சை பெற்றன. அப்பொழுது ஆரியர் பஞ்சாப்பை விட்டுக் கீழே சென்றனர். அவர்கள், கோசலத்தைக் கைப்பற்றிய இக்காலத்திலேயே கங்காநதிப் பள்ளத்தாக்கில் பெரிய சாதியாராக அறியப்பட்டனர்.

தசரதனின் பாட்டனாகிய புகழ்படைத்த இரகுவே கோசலத்திலுள்ள சகேதாவில் ஆரியபரம் பரையை முதலில் நாட்டினான். சகாதாவை ஆண்ட அரசருள் தசரதன் மிகப் புகழ்படைத்தவன். இவன் நீண்ட காலம் அரசுபுரிந்தான்.

அக்காலத்தில் கோசல இராச்சியம் உச்சநிலை அடைந்திருந்தது. அதன் இராசதானியாகிய சகேதா அயோத்தி (வெல்லப்படாதது) என்னும் புதிய பெயர் பெற்றது. இராமாயணத்தையும் இதுபோன்ற நூல்களையும் எழுதிய ஆசிரியர்கள் இராமனின் தந்தையாகிய தசரதனை ஆரிய வமிசத்தின் 56-வது அரசனாகக் கூறுகின்றனர். ஆரிய பரம்பரைக்கு முன்சகேதாவை ஆண்ட பழைய தமிழ் அரசரோடு சேர்த்து இவர்கள் பிழையான கணக்குச் செய்திருக்கின்றனர். பாரதயுத்தத்துக்கு முன் குரு குலத்தவருக்கு இராசதானியாயிருந்த அத்தினபுரம் மற்ற இராச்சியங்களுக்குத் தலைமையாயிருந்த தன்மையை இழந்துவிட்டாலும் கங்காநதி தீரத்திலுள்ள செழிப்பான இடமாகக் கருதப்பட்டது. குரு, பாஞ்சாலம் விதேகம், காசி முதலிய இராச்சியங்கள் ஒன்றோடு ஒன்று நட்புக்கொண்டிருந்தன. போர் முடிந்தபின் பாண்டவர் பழையநாட்டமிழர் வழக்கப்படி தவஞ் செய்யக் காட்டுக்குச் சென்றனர்*. அருச்சுனனின் பேரனாகிய பரிச்சித்து அத்தினபுரத்துக்கு அரசனானன். அவனுக்குப்பின் சனமேசயன் பட்டமெய்தினன். பரிச்சித்துவும் சனமேசயனும் கல்விப்பிரியர்களாயிருந்தனர். ஆரியர்களுடைய இலக்கியங்களைப் பிரகாசமடையச் செய்தவர்கள் இவரே. பரத வமிசத்தவன் அல்லது தமிழனாகிய சனமேசயன் ஆரியர் இலக்கியங்களை ஆதரித்தான் என்பது வியப்புக்கிடமாயிருக்கலாம். இவ்வகையான நிகழ்ச்சிகள் எப்படி நிகழ்கின்றன என்பதற்கு சில உதாரணங்களைக் கூறுகின்றேன். திருதராட்டிரன் காந்தார அரசன் புதல்வியாகிய ஆரிய கன்னிகையை

*இருக்கு வேத பாடல்களில் காட்டிற் சென்று தவஞ் செய்யும் வழக்கத்தைப்பற்றிக் காணப்படவில்லை எனத் தத்தர் கூறியிருக்கிறார்.

மணந்தபின், அத்தினபுர அரண்மனை மொழி ஆரியமாக விருந்தது. இது, புதுக்கோட்டை இளவரசரொருவர் திருச்சிராப்பள்ளியிலுள்ள நாய்க்க கன்னியை மணந்த தினல், முன் அரண்மனையில் வழங்கிய தெலுங்குமொழியி னிடத்தைத் தமிழ் ஏற்றுக்கொண்டது போலாகும். திருத ராட்டிரனது புதல்வனாகிய துரியோதனனது அரசாட்சி நன்கு அமைக்கப்பட்டிருந்தது. அவனுடைய சபையில் தமிழரும் ஆரியருமாகிய மூதறிஞர் பலரிருந்தனர். அவருள் அங்கதேய அரசனாகிய கன்னன், தமிழருடைய, தன்னயமற்ற நடு நிலைமைக்கு உதாரணமாவன். காந்தார இளவரசனாகிய சகுனி தன்னயமுடைய ஆரியருடைய குணத்துக்கு எடுத்துக்காட்டாவன். இவ்வகையான கலப்பு மணங்களாலும், அவற்றாலேற்பட்ட உறவாலும் முற்கால ஆரியர் தமிழ் நாட்டில் உபசரிக்கப் பெற்றனர். குருச்சேத் திரத்தில் வசிக்க ஆரியர்களுக்கு வீடுகள் அளிக்கப்பட்டன. காலகதியில் குடியேறிய ஆரியருக்கும் தமிழருக்கும் ஒரே வகையான உரிமைகள் வழங்கப்பட்டன. இதனால் இரு சாதியினரும் ஒரே சாதியினராய்க் கலந்து வாழும் வாய்ப்பு ஏற்பட்டது. தாம் வென்று கைப்பற்றிய கோசலநாட்டிற் போலவே ஆரியர் அத்தினபுரத்திலும் வாழத்தலைப்பட்ட னர். இவ்வாறு சேர்ந்து நடத்தும் வாழ்க்கையினால் மொழி சமயம் பழக்க வழக்கம் ஆதியனவும் கலந்தன. ஆரியர் தமிழரிடம் கற்றுக்கொண்ட அநேகம் தமிழ்ச் சொற்கள் ஆரிய மொழியிற் காணப்படுகின்றன. இருபிரிவினரும் கலந்து வாழ்ந்தார்களென்பதற்கு இது அறிகுறியாகும்.

குரு, பாஞ்சாலர், பாண்டவர் ஆதியோர் சிவனை வழிபட்டனர். இவர்களுக்குப் பின் வந்த அரசர் ஆரிய ரின் ஆதிக்கத்தால் கடவுள் பத்தியில் தளர்ந்தவர்களாயினர்.

அவர்கள் ஆரியரின் தெய்வங்களைத் தங்கடவுளர்களாகக் கருதினதோடு யாகங்களிலும் நம்பிக்கை வைத்திருந்தனர். இக் கொள்கை இவர் முன்னோரால் கடியப்பட்டது.

இதுவரையும் ஆரியர் தமிழரோடு கலப்புற்ற வகையினைக் கூறினோம். இனி சனமேசயன் காலத்து ஆரியருடைய நூல்கள் பிரகாசமடைந்த வகையினைக் கூறுவோம். பஞ்சாப்பில் வாழ்ந்த மக்கள் இயற்றிய யாகங்கள் ஆடம்பரமில்லாமலிருந்தன. பெரிய விருந்து கொண்டாடுவதற்காக அசுவயாகங்கள் செய்யப்பட்டன. ஆடம்பரத்தோடு கூடிய யாகங்கள் அரசர் அரண்மனைகளிலும், கங்காநதிப் பள்ளத் தாக்கிலுள்ள நாடுகளிலும் நடைபெற்றன. அசுவமேத யாகம் பாவத்தைப் போக்கி அரச பதவியை அளிக்குமென்று நம்பப்பட்டது. முன்னோருடையவும் தனதும் பாவங்களைப் போக்குவதற்குச் சனமேசயன் யாகங்களைச் செய்தான். யாகங்கள் புரியும் விதிகளைக் கூறும் பெரிய நூல்கள் எழுதப்பட்டன. இவைகள் திரட்டப்பட்டு 'பிராமணம்' என்னும் பெயரைப் பெற்றன. 'பிராமணம்' சனமேசயன் காலத்திற் தோன்றியதாகும். மாபாரதமும் இவர் காலத்திற் செய்யப்பட்டது. வைசம்பாயனர் சனமேசயனுக்குப் பாரதப் போர் வரலாற்றைக் கூறினர். பாரதஞ் செய்தவர் கிருட்டிண வியாசர் என்பது நம்பத்தக்கதாயில்லை. வியாசரின் புகழை நிலைநாட்டுவதற்கு அவர் மாணாக்கர் சிலர் அவர் பெயரால் வேதங்களைத் தொகுத்தும் மாபாரதத்தை இயற்றியும் போந்தார்கள் என்று கருத இடமுண்டு. இவ்வாறு செய்தல் அக்கால மரபு. கிருட்டிணவியாசர் என்னும் பரதவகுப்பினர், வேதங்களைத்திரட்டினவரும் மாபாரதத்தைச் செய்தவருமாயிருந்தால் அவர்காலம் மாபாரதத்துக்குப் பிந்தியதாதல் வேண்டும். மாபாரதம் ஒருவரால்

ஒருகாலத்துச் செய்த நூலாகக் காணப்படவில்லை. "பிற் காலத்துப் புலவர்களும் தாம்பாடிய பாடல்களைப் பாரதத் துட் சேர்த்து அதனைப் பெருப்பித்திருக்கின்றனர். பிற் காலத்தைய ஒவ்வொரு கொள்கைக் குரியோரும் தங்கொள் கைகளை நூலிற் புகுத்தியிருக்கின்றனர். "குருபாஞ்சால யுத்தத்துக்குப் பிற்பட்ட கிருட்டிணவணக்கம் புகுத்தப்பட் டிருக்கின்றது" என தத்தர் கூறியிருக்கின்றனர்.*

மாபாரதம் எழுதப்பட்டது மாத்திரமல்லாமல், வேதங்களின் தொகுப்பும் சனமேசயன் காலத்தில் நிகழ்ந் திருத்தல் கூடும். இத் தொகுப்புகள், ஆரியர் சிந்துநதி தீரத்திற் குடியேறியது முதல் யாகங்கள் ஆடம்பரமாகச் செய்யப்பட்டது வரையிலுள்ள காலத்தைக் குறிப்பிடுகின் றன. தமிழர் கடவுட் பூசைகளிற் தோத்திரப் பாடல் களைப் பாடுதல் மரபு. ஆகவே ஆரியருடைய யாகசாலைகளி லும் துதிபாடும் முறை கொண்டு வரப்பட்டது. இருக்கு வேதத்தினின்றும் தெரிந்தெடுத்த பாடல்களோடு சில பாடல்களையும் சேர்த்துத் தொகுத்துச் சாமம் என்று பெயரிடப்பட்டது. இருக்குவேதத்தினின்றும் எடுக்கப் பட்ட, கிரியைகளிற்படிக்கும் மந்திரங்களோடு சிலவற்றைச் சேர்த்துத் தொகுத்து யசுர் என்று பெயரிடப்பட்டது. இவ் விரண்டும் இருக்குவேதத்தோடு சேர்த்துத் 'திரயம்' என்று வழங்கப்பட்டன. சாமவேதத்தை ஓதும் இசை வகுப் புக்கு ஆரியர் தமிழ் இராவணனுக்கு மிகவும் கடமைப் பட் டவர்களாவர்.

---

Ancient India P. 130.

* தமிழர் மந்திரவித்தையிற் திறமை யடைந்திருந்தனர். அவர் கள் இதனை ஆரியருக்குக் கற்பித்தனர். பழங்காலந்தொட்டு மலை யாளம் மந்திர வித்தையிற் சிறந்த நாடாகக் கருதப்பட்டது. அருச் சுனன் பாரதப் போரில் வெற்றியடைந்தது இவ்வித்தையினாலேயே.

அதர்வம் அல்லது கடைசியாகச் சேர்க்கப்பட்ட வேதம் பலமந்திரங்களின் தொகுப்பை யுடையது. அம் மந்திரங்கள் இந்தியாவின் பல பாகங்களினின்றும் திரட்டி ஆரியமொழியில் எழுதப்பட்டனவாகும். சனமே சய னுடைய தந்தை பரிச்சித்து சர்ப்பந் தீண்டி இறந்தான். சர்ப்பங்களை முற்றாக ஒழிக்கக் கருதிய சனமேசயன், இந்தியா முழுமையிலுமுள்ள மந்திர வித்தைக்காரரை அழைத்து அவர்கள் வாயிலாகச் சர்ப்ப யாகஞ் செய்தான். அக்காலத்தில் அதர்வண வேதமென்பது நூலாகச் செய்யப் பட்டது. இத்தொகுப்பு நூல் பிற்காலத்தில் ஒரு வேத மாகக் கொள்ளப்பட்டு, வேதங்கள் நான்கு என்னும் வழக்கு உண்டாயிற்று. கி. பி. முதல் நூற்றாண்டு வரையிற் செய்யப்பட்டதென்று கொள்ளப்படும் மனு நூலில் வேதம் மூன்று என்றே கூறப்படுகிறது. இவ்வாறு சனமேசய னுடைய ஆட்சியில் ஆரியர் இலக்கியங்களுக்கு மதிப்பு ஏற் பட்டது.

சனமேசயனுடைய ஆளுகை பாரதப்போருக்கு ஒரு நூற்றாண்டு பிற்பட்டது. ஆரியர் கங்காநதி தீரத்திற் குடி யேறி ஒரு நூற்றாண்டுக்குள் அவர்கள் மிகுந்த முன்னேற்ற மடைந்தனர். அக்காலத்திற் கட்டுப் பாடான சாதி வேறு பாடு உண்டாகவில்லை. மனுவின் நீதி நூலும் தோன்ற வில்லை. மக்கள், இராசாயனர், வைசியர் என்னும் இரு பிரிவினரா யிருந்தனர் இராசாயனர் இராச்சிய மாள்பவர்

---

ஒவ்வொரு வீரனும் மந்திர வித்தையிற் பயின்றிருப்பது பழைய நாள் வழக்கு. தேவாஸ்திரங்கள் என்று சொல்லப்பட்டனவெல் லாம் மந்திர வித்தையாற் செலுத்தப்பட்ட அம்புகளேயே. அதர்வண வேதத்தில் பகைவரை அழிக்கும் மந்திரங்கள் காணப்படுகின்றன. இவற்றைச் சிலர் அருமையாக மறைத்து வைத்துக்கையாளுகின் றனர்.

களாயிருந்தனர். இவர்கள் ஒரு காலத்தில் அசுரர் என்று அழைக்கப்பட்டனர். பஞ்சாப்பில் வாழ்ந்த பழைய ஆரியர் மொழியில் அசுரர் என்பதற்குப் பிரபுக்கள் என்பது பொருள்; இவர்களல்லாத மற்றவர்கள் வைசியரென்றழைக்கப்பட்டனர். பஞ்சாப்பில் குடியேறிய எல்லோருக்கும் இது பொதுப் பெயராயிருந்தது. புதிய காரணங்களால் மக்கள் புதிய கடமைகளைச் செய்யும் அவசியம் நேர்ந்தது. ஆகவே ஆரியருக்குள் பல வகுப்புகள் தோன்றின. பிராமணங்களில் நன்கு பயின்றோரும் யாகக்கிரியைகளைச் செய்யும் திறமையுடையோரும் **பிராமணர்** எனப் பட்டனர். பிராமணர் யாகக்கிரியைகளைப் புரிந்தனர். அதனால் அவர்கள் ஏராளமான பொருள் பெற்றனர். அரசர்களும் செல்வரும் தமது செல்வங்கள் எல்லாவற்றையும் யாகம் என்னும் பெயரால் இக்கூட்டத்தாருக்கு இறைத்தனர். பிராமணங்களின் அறிவைக் கொண்டு அவர்கள் மிகுந்த பொருள் திரட்டிய போதும், பயனற்ற இக்கிரியைகளாற் திருப்தியுறாமற் பலர் உண்மை ஞானத்தைத் தேடிப் பெற முயன்றனர்.

சனகனுடைய அரண்மனையிலேயே சதபதப்பிரமாணம் ஆரம்பிக்கப்பட்டது. தமிழருடைய பழைய கதைகளும், சமயக் கொள்கைகளும், ஞானமும் சலப்பிரளயத்தோடு சம்பந்தப்பட்ட திராவிட அரசனாகிய மனுவின் வரலாறும், மறுபிறப்புப் பேரின்பம் முதலிய உண்மைகளும் இதனிடத்துக் காணப்படுகின்றன. இவை எல்லாம் ஆரியர் அறியாத கருத்துக்கள். இவை முதன் முறையாகச் சதபதப் பிராமணத்திற் காணப்படுகின்றன. சதபதப்பிராமணம் யாக்ஞவல்கியராற் செய்யப்பட்டது.

காசி அரசனாகிய அயதசத்துரு சனகனைப் போலக் கல்வியறிவுடையவனும் கல்வியை ஆதரித்தவனுமாவ

னென்று கோசிதகி உபநிடதம் கூறுகின்றது. கிரகபாலகி என்னும் கல்வியறிவுடைய பிராமணன் அயதசத்துரு விடம் வந்து "நான் உனது மாணாக்கனாக வரட்டுமா" "எனக் கேட்டான் அரசன், " இராசாயனனுக்குப் பிராமணன் மாணாக்கனாயிருத்தல் முறையன்று. வேண்டியவற்றைக் கேள் விளக்குகின்றேன்" என்றான். யாக்ஞவல்கியரைப் போல் மதிக்கப்பட்ட பிராமணருள் கௌதமர் அல்லது உடலகர் என்பவர் ஒருவர். இம்முனிவர் ஆரியஞானி களுள் சிறப்புடையவரெனக் கருதப்பட்டனர். இம்முனி வர் இராசாயனரிடமிருந்து நேர்மையாகவும் உறுதியாகவும் ஞானத்தைக் கற்றாரென்று உபநிடதங்கள் பலவிடங்களிற் தெளிவாகக் கூறுகின்றன. உபநிடதங்களின் பல பகுதி கள், இராசாயனர் அல்லது தமிழர் ஞானமுள்ள குரவர்க ளென்றும் மதிநுட்பமுடையவர்களென்றும் கூறுகின்றன. பிராமணர் இவர்களிடமிருந்தே ஞானத்தைப் பெற்றனர். சாந்தோக்கிய உபநிடதத்திற் காணப்படும் பின்வரும் வரலாறு இவ்வுண்மையை வலியுறுத்துகின்றது. மேலே கூறப் பட்ட கௌதமர் இராசானுச பிரவாகனால் வினவப்பட்ட ஐந்து கேள்விகளுக்கு விடை அறியாது பிரவாகனன் வாயி லாகவே விடைகளைப் பெற்றனர். பிரவாகனன், விடை யளிக்கும்போது உனக்குச் சொல்வதன் முன் இந்த ஞானம் பிராமணன் எவனுக்கும் போதிக்கப்படவில்லை. அதனைப் போதிக்கும் உரிமை இவ்வுலகம் முழுமையினும் இராசாயன வகுப்பினருக்கே உரிய குருநாட்டிலும், வென்று கைப்பற்றிய கோசலை நாட்டிலுமே பெரும்பாலும் ஏற்பட்டன. கங்காநதி தீரத்திலிருந்த தமிழரசர்களின் அரண்மனைகளில் பிராமணரின் எத்தனங்கள் பயனளிக்க வில்லை. அங்கு பிராமணரும் பிராமணங்களும் கவனிக்கப் படவில்லை.

முற்காலத்தில் ஒவ்வொரு தமிழரசனது அரண்மனை யிலும் அறிஞர்களின் சபை ஒன்றிருந்தது. அக்கால இலக்கியங்கள் தமிழரசரின் அரண்மனைகளிலிருந்த அறி ஞர் சபைகளைப் பற்றி அடிக்கடி கூறுகின்றன. முதன்மை யாகக் காசி அரசன் அயசத்துரு, பாஞ்சால அரசன் பிர வாகனன். விதேக அரசன் சனகன் முதலியோரின் சபை கள் கூறப்படுகின்றன. இவர்களுள் இராசாயனனாகிய சனகனது அரண்மனையிலிருந்தவர்களே முதன்மையானவர் கள். சனகன் சாத்திரஞான முடையவனும் ஆசாரியனு மாவன். தமிழர்களுடைய உண்மையான தத்துவ ஞானங்க ளடங்கிய உபநிடதங்களுக்குப் பெருமை அளித்தவர் இவ ராவர். வேறு நாடுகளிலிருந்தும் பல அறிஞர் இவனது அரண்மனைக்கு உண்மை ஞானத்தை விசாரித்தறியச் சென் றனர். அவருள் யாக்ஞவல்கியர் என்னும் ஓர் பிராமணர் இங்கு குறிப்பிடத் தக்கவராவர். சனகர் இவருக்கு உண் மையான தத்துவ ஞானத்தைப் போதித்தார். யாக்ஞவல் கியர் பிராமண மதத்திலிருந்து தர்க்க முறையான தமிழ் மதத்துக்குத் திருப்பப்பட்டார்.

யாக்ஞவல்கியர் இரண்டு பிராமணர்களுடன் சனக னிடஞ் சென்றார். சனகன் அக்கினி கோத்திரம் செய்யும் முறை யாதென வினவினன். யாக்ஞவல்கியரின் மறுமொழி கிட்டத்தட்டச் சரியாயிருந்தது; முற்றும் சரியாயிருக்க வில்லை. மற்று இருவரும் கூறிய விடை பிழையாயிருந்தது. அதன் மேல் சனகன் அக்கினி கோத்திரத்தைப்பற்றி விளக் கினன்; விளக்குதலும், யாக்ஞவல்கியர் தன் குருவாகிய பிருகுவின் உபதேசங்களிற் திருப்தியடையாதவராய் அவ ரிடம் கற்ற எல்லாவற்றையும் சத்தி எடுத்தார். அவர் சத்தி யெடுத்தது கிருஷ்ணயசுர்வேதத்தை. பின், தன் குருவை விட்டு நீங்கிச் சூரியனை யடைந்து சுக்கில யசுர்

வேதத்தைக் கற்றார். இவ்வாறு சதபதப் பிராமணங் கூறு கின்றது. சூரியனென்றது தமிழாசிரியனைக் குறிக்கும். இத ஞல் ஆரியர் பல தெய்வக் கொள்கையை விட்டுத் தமிழருக் குரிய ஒரு தெய்வக் கொள்கையைப் பின்பற்றினர் என்று விளங்குகின்றது. கடவுள், உயிர் என்பவற்றின் இயல்புகள் எவை என்று எவ்விடங்களிலும் விவாதிக்கப்பட்டன. கட வுள் எங்கும் நிறைந்திருக்கிறு ரென்பது தமிழர்களின் கொள்கை. இறைவன் எல்லாப் பொருள்களிலும் செறிந் திருக்கின்று னென்றும் அவனுக்குள்ளே தோற்றம் ஒடுக் கம் ஆதியன நிகழ்கின்றன வென்றும் கூறப்பட்ட உண்மை, கடவுள் எல்லாப் பொருளும் ஆகின்றுரென்றும், ஒவ் வொரு பொருளும் கடவுளின் பகுதி யென்றும் பிற்காலத் துத் திரிபுபெற்றது.

தமிழரின் ஞானத்தை எடுத்துக் கூறும் உபநிடதங்கள் அக்கால ஆரியர் நூல்களுட் சிறந்து விளங்கின. உபநிடதங்கள் தோன்றிய பின் பிராமணருடைய நூல்கள் மங்கத் தொடங் கின. இதற்கும், ஆரியர் தமிழர் மதத்தைத் தழுவுவதற் கும் காரணமாயிருந்தவர் சனகரே யாவர். இவர் அரசருக் கெல்லாம் அரசஞக விளங்கினுர். இதற்கு அவரது உண்மை ஞானமே காரணம். அவர் அரசாண்ட காலம் இன்னதென்று நினைவில் வைத்திருத்தல் நன்று. இவர் சகே தாவில் அரச பரம்பரையைத் தாபித்த இரகுவின் பேர ஞகிய தசரதன் காலத்தவர். சனகன் காலத்தில் பரிச்சித் துவின் பரம்பரை மறைந்து விட்டது. ஆனல் அவ்வமிசத் தைப் பற்றிய ஞாபகம் மறைந்து விடவில்லை. யாகங்கள் வாயிலாகப் பரிச்சித்துவின் வமிசத்தவரின் பாவங்கள் போக் கப்பட்டன. இது சனகன் காலத்தில் ஆச்சரியப் படத்தக் கதும் தர்க்கத்துக்குரியதுவுமா யிருந்தது.

யாக்ஞவல்கியரின் எதிர்க்கட்சியினர் ஒருவர் யாக்ஞவல்கியரை நோக்கிப் பரிசித்துக்கள் சென்றுவிட்டார்களோ? என்னும் கேள்வியைக் கேட்டார். அவர்களின் அஸ்வமேதம் இப்பொழுது எங்கே போய்விட்டது? என்று யாக்ஞவல்கியர் மறுமொழி கூறினார். பரிசித்துக்கள் என்றது அவர் காலத்து நூல்களை. இதனால் பிராமணங்களின் காலம் உபநிடத காலத்துக்கு முற்பட்டதென விளங்குகின்றது. சனகன் பிராமணரை ஆதரித்த சனமேசயன் காலத்துக்குச்சில ஆண்டுகளுக்குப் பிற்பட்டவனெனக் கூறலாம். பாரத யுத்தத்துக்குப் பிற்பாடு பரிசித்துவுக்குப் பின் வந்தவன் சனமேசயன். ஆகவே இவன் காலம்* கி. மு. 14-ம் நூற்றாண்டின் பிற்பகுதியாகும். ஆகவே சனகன் கி. மு. 13-ம் நூற்றாண்டின் முற்பகுதியில் இருந்தவனாவன். சகேதாவை ஆண்ட ஆரிய அரசருள் தசரதன் கீர்த்திவாய்ந்தவன். கங்காநதி தீரத்தில் ஆட்சி புரிந்தவர்களுள்ளும் இவன் விசேடமானவன். இவன் சனகனாகிய தமிழரசனோடு சம்பந்தப்பட்டவனென்று அறிகின்றோம். தசரதனின் புத்திரன் சனகனின் ஒரே புதல்வியை மணந்ததால் தமிழர் ஆரியர் என்னும் இரண்டு வம்சங்களுக்

---

* மாபாரதம் 5000 வருடங்களுக்கு முற்பட்ட நிகழ்ச்சியென்று சொல்லப்படுகின்றது. ஆராய்ச்சிகாரரெல்லாம் இது கி. மு. 14-ம் நூற்றாண்டில் நிகழ்ந்ததென்று கூறுகின்றனர். இது கிட்டத்தட்டச் சரி என்று சொல்வதற்குரிய ஆதாரங்கள் சிலவுண்டு மகதநாட்டரசனாகிய பிம்பசாகரன் புத்தர்காலத்தவன். இவன் பாரத யுத்தத்திற் கலந்துகொண்ட யுரசந்தாவுக்குப்பின் 52-வது அரசனாவன். புத்தர் காலம் கி. மு. 5-ம் நூற்றாண்டு. 51-அரசரின் ஆட்சிக் காலத்துக்கும், ஒவ்வொருவருக்குச் சராசரி 20 வருடங்களை வைத்துக் கணக்கிட அது பாரதப்போரைக் கி. மு. 15-ம் நூற்றாண்டிற் கொண்டு போய் விடுகின்றது. எவ்வகையிலாவது பாரதப்போர் கி. மு. 14-ம் நூற்றாண்டுக்குப் பிற்பட்டதன்று எனச் சாதிக்கலாம்.

கும் உறவு ஏற்பட்டது. குலகுருவாகிய வசிட்டரின் அனு மதியைப் பெற்ற தசரதன் தனது புதல்வன் இராமனை விசு வாமித்திரர் † என்னும் தமிழ் முனிவரிடம் ஒப்பித்தான். கோசலம் விதேகம் என்னும் இரண்டு இராச குடும்பங் களின் இணைப்பு பன்னிரண்டாம் நூற்றாண்டுக்குமுன்

† விசுவாமித்திர வசிட்ட குடும்பங்களுக்கிடையில் நீண்டபகை யிருந்ததென்பதற்குப் பல கதைகளுண்டு. விசுவாமித்திர குடும்பத் தினர் 'பரதரின் புதல்வர்' என்றும் 'பரதரில் விசேடமுள்ளவர் கள்' என்றும் வேதங்கள் கூறுகின்றன. விசுவாமித்திர குடும்பத் தினர் விரித்தசடை யுடையவர்களென்றும், வசிட்ட குடும்பத்தினர் வலப்பக்கத்தே முடிந்த கொண்டையுடையவரென்றுஞ் சொல்லப் படுகின்றனர். வசிட்டர் 'ரிற்றஸ்' என்னும் ஆரிய வகுப்பினராயி னும் அவர்கள் சூத்திரர் என்று சொல்லப்படுகின்றனர். வசிட்ட குடும்பத்தின் முன்னோராகிய 'ரிற்றஸ்' என்னும் வகுப்பினர் ஆரி யரில் உயர்ந்தவர்களா யிருந்தபோதும் வசிட்ட குடும்பத்தினர் சூத்திர ரென்னும் படியான கீழ்நிலையை அடைந்தனர். பிற்காலப் புராணங் கள் விசுவாமித்திரரைச் சத்திரியரென்றும் வசிட்டரைப் பிராமண ரென்றும் கூறுகின்றன. சத்திரியன் பிராமணன் என்னும் பதங்கள் முறையே தமிழரையும் ஆரியரையும் குறிக்கின்றன. வசிட்டர் பிசா மணரின் நட்பைப் பெற்று அவர்களாற் பாராட்டப்பட்டார். அவர்கள் வணக்கங்கூறி அவருக்குப் பலபெருமைகளைக் கொடுத்தனர். அவர்க ளிடத்திற் றரும சிந்தை கிடையாது. அவர்கள் விசுவாமித்திரர் மீது பல பழிகளைச் சுமத்தினர். விசுவாமித்திரர் அவர்களுடைய சத்துராதியாக விருந்தார். இது உண்மையன்று. விசுவாமித்திர வமிசத்தவர்கள் பிறப்பிற்றமிழர் அல்லது பரதர். வசிட்ட குடும்பத் தினர் 'ரிற்றஸ்' வகுப்பினர். அக்காலத்திற் றமிழரசர் கூடிய அதி கார முடையவர்களா யிருந்தனர். ஆகவே பிறப்பினாலும் படிப்பினா லும் விசுவாமித்திர வமிசத்தவர்கள் ஆரியர் வீடுகளிலும் வணக்கத் தோடு போற்றப்பட்டனர். இது வசிட்ட குடும்பத்தினரின் பொறா மையை மூட்டியது. இப்பொறாமைகளால் ஒருவர் ஒருவர்மீது பழி களைச் சுமத்தினதுமல்லாமல் அடிதடிகளிலு மிறங்கினர். கல்வியினா லும் உடல் வலியினாலும் விசுவாமித்திர குடும்பத்தினர் வசிட்ட குடும்பத்தினரிலும் அதிக வலிமையைப் பெற்றனர். ஆகவே தசரத னது அரண்மனையில் விசுவாமித்திரர் மிகுந்த செல்வாக்குப் பெற் றனர்.

ஒரே மயமாய்விட்டது. ஆரியர் பஞ்சாப்பிலிருந்து வந்து குடியேறியபின், பஞ்சாப்பிற்குக் கிழக்கு, சோணை ஆற்றுக்கு மேற்கு, ஆராவலி மலைக்கு வடக்கு அதன் கிழக்கேயுள்ள 'பிரியற்று' (Pryatra) முதலிய எல்லைகளுக்குட்பட்ட நாடுகளில் இரண்டு சாதிகளுக்கு மிடையில் ஒரு வேற்றுமையுமில்லாமல் மறைந்துவிட்டது. மேற்குறித்த எல்லைக்குட்பட்ட நாட்டைப்பிற்காலத்தார் ஆரியவர்த்தமென்று அழைத்தனர். இக் கலப்புச் சாதியார் மிகுந்த சீர்திருத்தமடைந்த பின்பு ஆரியர் முதன்முதற் குடியேறிய நாடாகிய பஞ்சாப்பை முற்றாக மறந்துவிட்டனர். ஆரியவர்த்தம் என்பதில் பஞ்சாப் சேர்க்கப்படவில்லை. ஆரியர் குடியேற்றத்தின்பின் தோன்றிய இரண்டாவது கால நூலாகிய பிராமணங்கள் ஆரணியகங்கள் உபநிடதங்கள் ஆரியவர்த்தத்தைப்பற்றிக் குறிப்பிடுகின்றன.

ஆரியர் இவ்வாறு தமிழ் மயமானபின் உபநிடதத்திற் கூறும் தத்துவஞான ஆராய்ச்சியில் ஆவல் கொண்டவர்களாய் ஞானத்துக்குப் பிறப்பிடமாகிய தென்னிந்தியாவுக்கு யாத்திரை செய்தனர். இவர்கள் தமிழ் அறிஞராலும் அரசராலும் வரவேற்கப்பட்டனர். ஆகவே அவர்கள் தமிழ் அரசரின் அரண்மனையை அலங்கரித்த அந்தண ஆசாரியர்களிடமிருந்து தமிழ் ஞானத்தைக் கற்றனர். ஆரியர் தமிழரோடு இவ் வகையான உறவு வைக்கத் தொடங்கிய பின்னரே 'சூத்திர' இலக்கியங்கள் எழுதப்பட்டன. அவ்விலக்கியங்கள் பலவற்றின் பிறப்பிடம் தென்னிந்தியாவாகும். இதுவரையும் வசன நடையில் எழுதப்பட்ட ஆரியரின் இலக்கியங்கள் இப்பொழுது செய்யுள் நடையில் எழுதப்படலாயின. இம் முறை தமிழரைப் பின்பற்றிச்

---

1 சூத்திரப்பாவினுற் செய்யப்பட்டவை.

செய்யப்பட்டதென்பதைச் சூத்திர இலக்கியங்களைப் பார்த்தறியலாம். வடக்கே உள்ளவர்களுக்கும் தெற்கே உள்ளவர்களுக்குமிடையில் கி. மு 10-ம் நூற்றாண்டு முதல் இவ்வகையான உறவு ஏற்பட்டதை அறிகின்றோம். தெற்கே வந்த பிராமணரிற் பெரும்பாலோர் தமது நாட்டுக்குத் திரும்ப விரும்பவில்லை. ஆகவே அவர்கள் தென்னாட்டிற் றங்குவாராயினர் தமிழ் அந்தணரின் மாணாக்கராகத் தென்னாட்டிற் றங்கிய ஆரியப் பிராமணர் அந்தண வகுப்பினரோடு கலந்தனர். தென்னிந்தியாவிற் காணப்படும் பிராமணரிற் பெரும்பாலோர் தமிழர் என்பதிற் சந்தேகமில்லை.

தெற்கே முதன் முதல் அடி எடுத்து வைத்த ஆரியன் இராமனென்று நாங்கள் படிக்கின்றோம். இக்கொள்கை ஆட்சேபத்துக்கு இடமானது. இராமன் சனகன் காலத்தவனாயின் அவன் கி. மு. 13-ம் நூற்றாண்டில் விளங்கியவனவன். இராமாயணம் கி. மு. 8-ம் நூற்றாண்டுக்கும் ஐந்தாம் நூற்றாண்டுக்கு மிடையில் எழுதப்பட்ட நூலென்பதிற் சந்தேகமில்லை. தென்னிந்திய பழஞ் சரித்திரம் ஒன்றை எடுத்துக்கொண்டு அதனோடு கோசலதேசத்து இராமனையும் பிணைத்து இராமாயணம் பூர்த்தி செய்யப்பட்டிருக்கிறதெனத் தெரிகிறது. அந்நூலாசிரியர் வடக்கே இருந்த தசரதனையும் சனகனையும் ஒரே காலத்தவர்கள் ஆதலை வைத்துக்கொண்டு, தென்னாட்டு இராவணன் அகத்தியர் முதலியோர் காலங்களையும், இடங்களையும் கவனியாது நூல் செய்திருக்கின்றார். அகத்தியர் ஆரியர் சிந்து நதியின் மேற்குக் கரையில் வந்து குடியேறுவதன் முன் வாழ்ந்தவராவர்.

ஆரியர் வந்து பஞ்சாப்பிற் குடியேறிய முதலாம் குடியேற்ற காலத்துத் தமிழரும் ஆரியரும் கலந்து ஒன்றுபட்டனர். கங்கா நதி தீரத்திற் குடியேறிய இரண்டாங் காலத்தும் இரு சாதியாருங் கலந்து ஒன்றுபட்டனர். ஆகவே இரண்டு சாதியாருக்குமிடையில் வேற்றுமை காணமுடியாத கலப்பு ஏற்பட்டது. தற்கால மக்களின் மொழியையும் சமயத்தையும் ஆராய்வதால் தமிழருக்கும் ஆரியருக்குமிடையில் எவ்வளவிற் கலப்பு ஏற்பட்டிருக்கின்றதென்பது விளங்கும்.

முதலிற் பஞ்சாப்பிற் குடியேறிய ஆரியர் எப்படித் தமிழரோடு கலந்து கொண்டார்களென்று சரித்திர சம்பந்தமாக அறிந்து கொண்டோம். இரண்டாவதாக இவர்கள், பல காரணங்களாற் கிழக்குத் திசையாகச் சென்று கங்கா நதிப் பக்கங்களில் வாழ்ந்த தமிழர் அல்லது பரதரோடு எப்படிக் கலந்தார்களென்று அறிந்தோம். சரித்திர சம்பந்தமான ஆராய்ச்சியை விட்டு இனிச்சமயம் மொழி என்பவற்றை ஆராய்வோம். ஒரு சாதியாரின் பழைய வரலாற்றை அறிந்து கொள்வதற்கு சமய, மொழி ஆராய்ச்சிகள் நம்பத்தக்க ஆதாரங்களாக இருக்கின்றன.

இரண்டாவது குடியேற்ற காலத்தில் கலப்பு ஆரியர், தமிழரின் நியாய முறையான சமயத்தைத் தழுவினார்களென அறிந்தோம். அவர்களின் சமயமாற்றம் சடுதியாக ஏற்பட்டதன்று. அக்கால நிலைமைக் கேற்றபடி சிறிது சிறிதாய் ஏற்பட்டாலும் உறுதியாக விருந்தது. தமிழருடைய மதம் ஞாயத்தைத் தழுவியிருந்தது. ஆரியருடைய மதம் கற்பனையைத் தழுவியிருந்தது. பஞ்சாப்பில் ஆரியர் குடியேறிய காலம் முதல் வேதபாடல்களில் தமிழ்க்கொள்கைகள் நுழைந்திருக்கின்றன. இருக்கு வேதத்தில் பழைய தெய்

வங்களும் வருணனும், இந்திரனும், (இரவும் பகலும் அல்லது இருண்டவானமும் ஒளியுடையவானமும்) காணப்படுகின்றனர். ஆரியர் இந்தியாவை அடைவதன்முன் வாழ்ந்த பூர்வ ஆரியநாட்டில் இத்தெய்வங்கள் வழிபடப்பட்டன. பழைய ஆரியர் வானத்தையும் அது அடையும் பல மாறுதல்களையும் பல தெய்வங்களையும் வழிபட்டனர். இந்தியாவை யடைந்த ஆரியர் தமிழரின் ஒரு தெய்வ வழிபாட்டைக் கண்டனர். கண்டு இந்திரனை எல்லாத் தெய்வங்களுக்கும் தலைவனாகக் கொண்டனர். இந்திரன் எல்லாக் கடவுளருக்கும் தலைவனாகவும் கொள்ளப்பட்டான். இந்திரன் என்னுஞ் சொல் இறைவன் என்னுந் தமிழ்ச் சொல்லின் உச்சரிப்பு வேறுபாடாயிருக்கலாம்.

அவர்கள் தாங்கள் புதிதாகப் பழகிய பரதர் அல்லது தமிழரிடமிருந்து சூரியவணக்கத்தையும் கைக்கொண்டனர். சூரிய வணக்கத்துக்குரிய காயத்திரிப்பாடல்களைச் செய்தவர்கள் பரதரில் விசேடமானவர்கள், எனப்பட்ட விசுவாமித்திரர்களே. பஞ்சாபிலுள்ள 'மல்ரன்' (Maltran) என்னும் நகரில் சூரியனுக்குப் பழைய கோயிலொன்று இருந்ததெனஅறிகின்றோம். ஒளரங்கசீப் என்னும் மகமதிய மன்னனின் கட்டளையால் அவ்வாலயத்திருந்த தங்கச் சிலை உருக்கிக் கருவூலத்தில் சேர்க்கப்பட்டது. மல்ரன் என்னும் இடம் மல்லர் அல்லது மள்ளர் வாழ் இடமாயிருந்தது. இந்தியாவின் மேற்குப்புறத்தில் மள்ளர் பிரதானமான சாதியாராவர். தமிழரின் ஒரு பிரிவினராகிய இவர்கள் மல்ரன், மர்வ மல்வ என்னும் எல்லைக்குட்பட்ட நாடுகளிலும் இராசபுத்தானாவிலும் காணப்பட்டனர். பள்ள என்பது மள்ள என்பதன் உச்சரிப்பு வேறுபாடு. சௌராஷ்டிரத்தில் வாழும் சாதியினருக்கு

இப்பெயர் வழங்கும். அங்கு சூரிய வழிபாடும் அவ்வழி பாட்டுக்குரிய பலகோயில்களு மிருந்தன.

ஆதிகாலந் தொட்டுத் தமிழருக்கிடையில் சிவ வணக்கத்தைப் போலவே சூரிய வணக்கமும் இருந்தது. தத்துவ ஞானத்தைப் பெறுவதன்முன் அவர்கள் சூரியனையே வணங்கினார்கள் எனக் கூறலாம். எலலம் அல்லது அக் காட்டிலுள்ள கட்மிரு (Cadmira) என்னுமிடம் தமிழரின் குடியேற்ற நாடாகும். பேபெல் (Babel) என்னும் இடம் சூரியன் கோயிலுக்குப் பேர்போனது. பேபெல் என்பதற்குக் கடவுளின் வாயில் என்பது பொருள். ஆகவே கட்மீரா என்னும் நகரம் பேபெல் என்னும் பெயரைப் பெற்றதோடு பேபெல் என்னும் கோயிற் பெயரிலிருந்து, எல்லம், பபிலோன் என்னும் பெயரைப் பெற்றது மேல்நாட்டறிஞர் கட்மீரா என்னும் பெயர் துரானிய உற்பத்திக்குரியதென்றும், பேபெல் செமட்டிய உற்பத்திக்குரியதென்றுங் கூறுகின்றனர். ஆனால் பேபெல் என்னும் பொருளே கட்மீரா என்பதற்கும் என்று அவர் கூறுகின்றனர். அவர்கள் இரண்டு சொற்களுக்கும் ஒரே பொருள் கொண்டாலும் அவற்றின் உற்பத்தியைக் கூறும் முறையில் பிழை விடுகின்றனர். கட்மீரா என்பது கதிரவம் என்னும் தமிழ்ச் சொல்லின் உச்சரிப்பு வேறுபாடு எனக் கூறலாம், பேபெல் என்பது பகல் என்னும் அடியாகத் தோன்றியது. வாய் என்பது வாயிலை உணர்த்தும். ஆகவே பகல்+வாய் சூரியனின் வாயில் என்னும் பொருளைத்தரும் 'பேபெல்' என உச்சரிப்பு வேறுபாட்டால் திரிபடைந்தது.

தமிழர் இரண்டு சாதியாரகப் பிரிவதற்குச் சமயமே காரணமா யிருந்ததெனத் தெரிகிறது. தங்கள் உற்பத்தித் தானத்தினின்றும் பிரிந்துவந்து தென்னிந்தியாவிற் றங்கி

ஞோர் சிவவழிபாட்டினர். வட இந்தியாவிற் றங்கிஞேர் சூரிய வழிபாட்டினர். தெற்கே இருந்து அகத்தியர் வடக்கே சென்று காசியில் அல்லது வாரண வாசியில் சைவ சமயத்தைப்பரப்பும் வரையும் வடக்கே சூரிய மதமே யிருந்தது. ஐரோப்பாவிற் போலச் சமயம் தெற்கிலிருந்து மேலே பரவிற்று. வடக்குப் பிரிவினருள் மதுரை பாஞ் சாலம் குரு முதலிய நாடுகளிலிருந்தவர்கள் சிவ வணக்கத் தைக் கைக்கொண்டனர். ஆற்றின் மறு கரையிலிருந்தவர் கள் பழைய கொள்கையுடன் வாழ்ந்தனர். சூரியனை வணங் கிஞேர் சூரிய வமிசத்தினர் எனப்பட்டனர். சிவனை வணங் கிஞேர் சந்திர வமிசத்தினர் எனப்பட்டனர். சிவபெருமான் முடியிற் சூடியிருக்கும் பிறை தமிழரைக் குறிப்பதோடு அதைச் சூடுவதால் அவர் தனது மக்களைக் காப்பாற்றுகின் றனர் என்பதையும் விளக்குகின்றது. இவர்கள் இருபிரி வினரா யிருந்தபோதும், அவர்கள் மனுவின் சந்ததியாகிய பொது உற்பத்திக்குரியவர்கள் என்னும் பழைய வரலாற்றை மறந்து விடவில்லை, கன்னபரம்பரைக்கதைகள் பல வற் றைத் தொகுத்துக் கூறும் புராணங்கள் மனுவென்னும் திராவிட அரசனைப் பற்றிக்கூறுகின்றன. சந்திர வமிசம் பழமை தொட்டுச் சூரிய வமிசத்திலும் பார்க்கப் பெருமை பெற்று விளங்கிற்று. இருபிரிவினரும் கொள்கையில் மாறுபட்டபோதும் ஒரு கடவுள் வணக்கமுடையவரா யிருந்தனர்.

தமிழரின் ஒரு தெய்வ வழிபாட்டைப் பார்த்து ஆரியர் சிருட்டித்த இந்திரன், தமிழர் கூறும் எல்லாம் வல்ல, எங் கும் நிறைந்த கடவுளோடு ஒப்பிட முடியாமலிருந்தமையின் அவர்கள் அதிதி என்னும் பிறிதொரு தெய்வத்தை உண்டு பண்ணினர். இத்தெய்வமும் முதன்மை எய்தியதாக இருக்கு வேத பாடலிற் சொல்லப்படவில்லை. அதிதி

என்பதற்குப் பிரிக்கப்படாதது, முடிவில்லாதது, என்று முள்ளது என்னும் பொருள் வேதத்திற் சொல்லப்படுகின் றது. இந்திரன் வருணன் மித்திரன் சூரியன் ஆதியோர் முடிவில்லாத சத்தியாகிய தாயின் புதல்வர்களென்றும், ஆதித்தர்கள் என்றும் சொல்லப்பட்டனர். அதிதியோடு ஒப்பிடத் தக்க கடவுளர் மற்றைய பழைய ஆரிய வகுப் பின ரிடையே காணப்படவில்லை. இப்பெயர் இந்திய நாட் டிற் றோன்றிய தென்பதற்கு அறிகுறியாக அப் பெயரில் கடவுள் என்னும் சொல்லின் பொருள் தொனிக்கின்றது. கடவுளைத் தாய் அவன், அவள், அது என வழங்கும் முறை தமிழர்களுக்கு மாத்திரம் உரிய தொன்றாகும். வேதங்களில் இவ்வகையான புதிய வழக்குகள் காணப்படு கின்றன. இது இரண்டு சாதியார் ஒருமித்துக் கலந்தமை யால் ஏற்பட்டது. இப்பொருள்பற்றி ஐரோப்பிய ஆசிரியர் கள் வேண்டியளவும் எழுதியிருக்கின்றனர். கடவுள், படைத்தல் காத்தல் அழித்தலாகிய இறைவனின் முழு முதற் றன்மை, மறுபிறப்பு, வினைப்பயன் முதலிய கொள் கைகளை ஆரியர் அறியாரென்றும், அவற்றையெல்லாம் பிற ரிடமிருந்து அறிந்திருக்கிறார்களென்றும் அவ்வாசிரியர்கள் கூறியிருக்கின்றனர். இதை நாம் ஆமோதிக்கின்றோம். ஆரியர் பூர்வ குடிகளோடு கலந்தபின் தமது பழைய மதத் தையும் நாகரிகத்தையும் கைவிட்டுப், பூர்வ குடிகளுக்குரிய கொள்கைகளைப் பின் பற்றினார்களென்று முன் விளக்கி யுள்ளோம். இந்து ஆரியருக்கும் மற்ற ஆரியருக்குமுள்ள சமயத் தொடர்பு அறியமுடியாமலிருப்பது ஆச்சரியப்படத் தக்கதன்று.

ஒன்றைக் கொடுத்து ஒன்றை வாங்குவது போலக் கடவுளுக்குச் சிலவற்றைக் கொடுத்துப் பிரதி உபகாரமாகச் சிலவற்றைக் கேட்பதாகிய வழிபாட்டு முறையையே ஆரி

யர் அறிந்திருக்கின்றனர். அவர் கடவுள், உயிர் என்பவற்றின் தத்துவங்களை அறியவில்லை. அவர், இயற்றிப் போந்த கிரியைகளால் இவற்றை அறிதல் முடிவதன்று. தமிழரின் ஞானம் உயர்ந்த உண்மைகளை அடிப்படையாகக் கொண்டதாதலின் அசைவில்லாதிருந்தது. இராசபுத்தானத்தில் வாழ்ந்த ஆரியர் தமிழ் மதத்தைத் தழுவி அதன் வளர்ச்சிக்கு அதிகம் முயன்றிருக்கின்றனர். கி. மு. 1000-க்கும் 200-க்கு மிடையிலுள்ள சூத்திர காலத்து பல சூத்திர இலக்கியங்களை அவர்கள் செய்தனர். இராசபுத்திரரின் அதிகாரத்தின் கீழ் பிராமணர் மிகுந்த ஆதிக்கம் பெற்றனர். திருத்தம் என்னும் பெயருடன் இவர்கள் பல கேடுகளைச் செய்தனர். குருக்கள்மாரின் அதிகாரத்தால் பலநற்கருமங்கள் விலக்கப்பட்டன. புராணமதம் ஆரம்பித்தது. புதிய சத்திரியராகிய இராசபுத்திரர் நிலை நாட்டிய புராணமதம் கி. பி. ஐந்தாம் நூற்றாண்டில் ஆரம்பமாயிற்று. முற்காலத்திற் சத்திரியர் பிராமணரிலும் மேலானவர்களாகக் கொள்ளப்பட்டனர். பிராமணர், சத்திரியரின் மேற் பார்வையின் கீழ் பொருளுக்காக யாகங்களை நடத்தினர். இக் கிரியைகளைச் செய்வதற்காக அவர்கள் மந்திரங்களையும் பாடல்களையும் மனப்பாடஞ் செய்தனர். அநேகர் அம்மந்திரங்களுடையவும் பாடல்களுடையவும் பொருளை அறியார். கல்வி, சத்திரியனுக்கு உரியதாயிருந்தது. சாமானிய பிராமணனிலும் பார்க்கச் சத்திரியன் கல்வியறிவுடையவனாயிருந்தான். சமய உண்மைகளும் ஞானங்களும் சத்திரியராகிய இராசாயனரால் வெளியிடப்பட்டன.

படை எடுத்து வந்தவர்களாகிய இராச புத்திரர் பிற்காலத்தில் இந்தியாவுக்குத் தலைவராயினர். இவர்களுக்குப் பழைய சரித்திரமாவது, சத்திரியருக்குரிய சரித்திரப்

பெருமையாவது இல்லை. இவர்கள் பிராமணரைத் தமக்கு மேலாகக் கொண்டனர்; தாம் சத்திரியர் என்று அழைக்கப்படும் புகழை விரும்பி இராச்சியங்களைப் பெரிதாக்கினர். பிராமணர் தாம் மேல் என்பதை எல்லா விடங்களிலும் நாட்ட முடியவில்லை. வட இந்தியாவில் தங்கள் முதன்மையை நாட்டுவதிலும் நூல்களைத் தம் எண்ணப்படி கையாளுவதிலும் அவர்களுக்கு விலங்கம் ஏற்படவில்லை. தென் இந்தியாவில் இவ்வாறிருக்கவில்லை. அங்கு கி. பி. 10-ம் நூற்றாண்டுவரையில் பிராமணர் கீழாகவே கருதப்பட்டனர். ஆகவே அவர்களுடைய வாழ்க்கை சிறப்படையவில்லை. இன்றும் அவர்களைக் குரவர்களாகத் தென்னிந்தியர் ஏற்றுக்கொள்வதில்லை. கி. பி. 8-ம் நூற்றாண்டு முதல் 10-ம் நூற்றாண்டு வரையுமுள்ள காலம் சரித்திரத்தின் இருட்காலமாகும். இராசபுத்திரர் பழைய இராச்சியங்களை வென்று கைப்பற்றியபோது ஒவ்வொரு (Caste) சாதியினரும் முதன்மைக்காகப் போராடினர். இராச புத்திர அரசரின் துணையைக் கொண்டு பிராமணர், சமஸ்தானங்களிற் குருக்களாக அமர்ந்தனர். இராச்சிய சம்பந்தமான கலகங்களெல்லாம் சமயத்தின் பெயரால் நடந்தன. இக்கலகங்கள் நாட்டின் நன்மைகளைப் பலவகையிற் கெடுத்தன. இக்காலத்தில் தமது பெருமையை நாட்டுவதற்குப் புராணங்கள் பிராமணரால் எழுதப்பட்டன. வட இந்தியாவிற் செய்தது போலவே தென்னிந்தியாவிலும் தமக்கு இடையூறு எனக் கண்ட நூல்களை இனி ஒரு போதும் உலவாதபடி அழித்தனர்; மாற்றியும் கூட்டியும் திருத்தியும் எழுதினர். பிராமணரும் பிறரும் முதன்மைக்காகப் போராடிய காலத்துத் தோன்றிய பாடல்கள் பல தமிழிற் காணப்படுகின்றன. சிவவாக்கியர் கொங்கணர் முதலானோர் ஒரு தெய்வக் கொள்கையை வற்புறுத்தியும் பிராமண

ருடைய பல தெய்வக் கொள்கையை மறுத்தும் பாடல்கள் செய்தனர்.

இவ்வாறு தமிழரின் வலிகுன்றிய காலத்துப் பழைய தமிழ் முனிவர்களால் தீது என ஒதுக்கப்பட்ட சாதிக் கோட்பாடு தலை எடுத்தது. சாதிப் பிரிவினையால் தமிழ்ச் சாதியின் வளர்ச்சி குன்றிற்று. இது பிராமணரின் ஆதிக்கம் மேற்பட்ட புராண காலத்தில் ஆரம்பித்தது. தமிழ் நாட்டில் ஒழுக்கமும் தொழிலும் பற்றிச் சில பிரிவுகள் தோன்றி யிருந்தபோதும் எல்லோருக்கிடையிலும் தின்பனவும், மகட்கொடை முதலியனவும் நின்று விடவில்லை. அந்தண மரபினராகிய சுந்தரர், பரவை சங்கிலியார் என்னும் இரு தாழ்ந்தவகுப்புப் பெண்களை மணந்ததும், வேளாளராகிய அப்பர் அடிகளை அந்தணராகிய அப்பூதி அடிகள் உடன் வைத்து உண்டதும் போதிய சான்றுகளாம். 10-ம் நூற்றாண்டு வரையில் இவ்வாறான நிகழ்ச்சிகள் நடைபெற்றதற்குப் போதிய பிரமாணங்களுண்டு. 13-ம் நூற்றாண்டில் அந்தணராகிய அருணந்தி சிவாசாரியார் வேளாளராகிய மெய்கண்ட தேவரிடத்திற் தீட்சை பெற்றார். அந்தணராகிய உமாபதி சிவாச்சாரியார் வேளாளராகிய மறைஞான சம்பந்தர் என்னும் குருவின் உண்ட சேடத்தை அருந்தினார்.

அக்காலத்து ஒவ்வொருவனதும் விலை மதிப்புக்குரிய செல்வம் சமயமும் கல்வியுமாக விருந்தது. எல்லா வகுப்பினரும் சாதிபேதமின்றி ஆலயங்களில் வைக்கப்பட்டிருக்கும் மூர்த்திகளுக்கருகிற்றடை யின்றிச் சென்று வணங்கினர். அறுபத்துமூவர் எனச் சைவர்கள் போற்றும் அடியார்கள் பலசாதிகளைச் சேர்ந்தவர்களாகக் காணப்படுகின்றனர். "ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும் கங்கை

வார் சடைக்கரந்தார்க் கன்பராகில்—அவர் கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே" என அப்பர் சுவாமிகள் கூறுகின்றார்.

பிற்கால அரசரால் பிராமணருக்குப் பெருமை ஏற்பட்டாலும் மக்கள் அவர்களை ஏற்றுக்கொள்ளவில்லை. பிராமணர் நடந்துகொள்ளும் முறையை மற்றவர்கள் விரும்பவில்லை. ஆகவே அவர்கள் பிராமணரைத் தம்மினின்றும் நீக்கினர். மற்றவர்கள் எல்லோரும் வீடுகளிற்கூடி இருந்து விருந்து கொண்டாடினர். புதிதாகக் கிடைத்த மதிப்பைப் பாதுகாப்பதற்காகப் பிராமணரும் மற்றவர்களின் தொடர்பைவிட்டனர். இதுவே தென்னிந்தியாவில் முதன்முறையாகத் தோன்றிய சாதிப் பிரிவாகும். தென்னிந்திய பிராமணர் தமிழரென்றே முன்னோரிடத்திற் கூறியிருக்கின்றோம். வட இந்தியப் பிராமணருக்கும் தமிழருக்கும் சில சந்ததிகள் தோன்றியிருக்கலாம். கால கதியில் பகைமை ஆற்றுப்போனாலும் இப்பொழுதும் மாறான நிலைமையே இருந்து வருகின்றது. மற்றவர்களுக்கும் இவர்களுக்குமிடையில் தின்பனவு உண்பனவு பெண்கோடல் முதலியன இன்றும் நடைபெறுவதில்லை. உணவும் தண்ணீரும் கொடுக்க மறுப்பது சாதிப் பிரட்டத்துக்கு அறிகுறியாகும். இவ்வுண்மை மறக்கப்பட்டு, அவை உயர்ந்த சாதிக்குரிய அறிகுறிகள் என்று தவறாகக் கருதப்படுகின்றன. கம்மாளர், பிராமணர் வீடுகளில் உண்பதில்லை; இதனால் அவர்கள் தாம் பிராமணரிலும் மேல் எனக் கருதுகின்றனர். பிராமணன் வீட்டிலும் வேளாளன் வீட்டிலும் உணவு கொள்ளும் வண்ணான், கம்மாளன் வீட்டில் உண வருந்த மறுக்கிறான். இவை யெல்லாம் அன்னியருடைய பார்வைக்கு ஆச்சரியமாகத் தோன்றும். தமிழ்நாட்டில் ஒவ்வொருவனும் தனது

சாதியைப் பற்றிப் பெருமை பாராட்டுகின்றான். பறையன் கூடத்தனது குலத்தைப் பெருமை பாராட்டி "பார்ப் பானுக்கு மூப்பன் பறையன் கேட்பாரின்றிக் கீழ்ச்சாதி யானேன்" என்னும் முதுமொழியை எடுத்துக் கூறுகின் றான்.

சாதிப் போராட்டம் மூன்று நூற்றாண்டுகளாக நடந் தது. கொள்கைகள் எப்போதும் ஒரு மாதிரி இருப்பதில்லை. பிராமணரை ஆலயங்களினின்றும் நீக்கவும் அவர்களுடைய அதிகாரத்தைக் குறைக்கவும் முடியாமல் போகவே ஒவ் வொரு வகுப்பினரும் தமது சமயச் சடங்குகளை இயற்று வதற்குத் தங்களுக்குள் கல்வியறிவு ஒழுக்கங்களிற் சிறந்த ஒவ்வொருவரைக் குருக்களாகத் தெரிந்தெடுத்தனர்.

தென்னிந்திய சமயநிலையங்கள் ஒவ்வோர் குருவின் கீழ் இருந்தன. அக்குரு பிராமண வகுப்பைச் சேர்ந்தவரா யிருப்பது அருமை. தென்னிந்தியரின் சமயக் கொள்கை களை அறியாத மேல் நாட்டார் புராண மதமும் சங்கராச் சாரியாரின் மாயாவாதமுமே அவர்களுடைய சமயம் என்று எழுதுகின்றனர். இந்தியாவைக் குறித்து எழுதிய மேல் நாட்டு ஆசிரியர்கள் வட இந்தியாவில் இருந்தே எழுதி யிருக் கின்றனர். பிராமணர்களிடமிருந்தே அவர்கள் நூல் எழுது வதற்கு ஆதாரங்களைப் பெற்றிருக்கின்றனர். இன்னும் சங்க ரர் சமக்கிருதத்தில் எழுதிய சமயக் கோட்பாடுகளை மாத் திரம் படித்து அவர்கள் தமது அபிப்பிராயங்களை வெளி யிட்டிருக்கின்றனர். சங்கரர் தென் இந்தியா விருந்த போதும் அவரது கொள்கையைத் தென்னிந்தியர் ஏற்றுக் கொள்ளவில்லை. தமிழரிற் பெரும் பாலோர், சித்தாந்த சைவர். அதோடு மாறுபட்ட சங்கரரும் அவர் கொள்கை யும் தெற்கிற் கவனிக்கப் படாமையால் அவர் வடக்கே

சென்றார். அங்கு அவருடைய மதத்துக்குப் பெருமை அளிக்கப்பட்டது. இதனால் சங்கரர் செல்வதன் முன் வடக்கே உள்ளவர்கள் சிறந்த மதக்கொள்கை இல்லாம லிருந்தார்களென விளங்குகின்றது. சங்கரர் மதத்தைப்பற்றி ஆராய்ந்து எழுதிய மேல் நாட்டார் இந்தியாவிற் கவனிக் கக்கூடிய மதக்கொள்கை இது ஒன்று மாத்திரம் எனக் கருதினர். இதனிலும் மேலான மதக்கொள்கை ஒன்று தெற்கே உண்டு என்பதை மேல்நாட்டவர்கள் இப்பொழுது தான் உணர ஆரம்பித் திருக்கின்றனர். தென்னிந்தியாின் சிவமதம் அந்நாட்டுக்கே சொந்தமானது. அதன் கொள்கை கள் தமிழ் மதத்தைப் பின்பற்றியன. சாத்திரமும் சமயமும் ஒன்றோடு ஒன்று அணைந்து சென்றன. சங்கராச்சாரியர் தமது மதக்கொள்கைகளை வடக்கே பரப்புவதற்கு 2000 ஆண்டுகளுக்கு முன், அகத்தியர் காசியில் (வாரணவாசி) பரப்பியதும் பழைய முனிவர்களால் ஆதரிக்கப்பட்டது மாகிய சமயமும் இதுவே. இச்சமய உண்மைகள் ஆகமங்க ளென்னும் சைவ நூல்களிற் பொதிந்து கிடக்கின்றன. சமக்கிருதத்தில் மொழிபெயர்க்கப்படாத ஆகமங்கள் அழிக் கப்பட்டன. சமக்கிருத மொழிபெயர்ப்புகள் மூலத்தைச் சரியாகப் பின் பற்றிச் செய்யப்பட்டனவோ என்பது சந் தேகத்துக்கு இடம். பிற்காலத்திற் புராணமெழுதியவர்கள் ஆகமம் இருபத்தெட்டெனக் கூறியிருக்கின்றனர். புராணங் களுக்குத் தலைமையான ஸ்கந்தத்தின் ஒரு பகுதியான சூத சங்கிதை ஆகமங்களின் பெயர்களை முதலிற்கூறி அவற்றின் ஆக்கியோன் ஈசுவரன் என்று கூறுகின்றது. அது புராணங் களை மனிதர் செய்தார்கள் என்றும் குறிப்பிடுகின்றது. ஆக மங்கள் சரித்திரகாலத்துக்கு முற்பட்ட பழைமையுடையன வென்பது உண்மை. அவை இருக்கு வேதத்தை ஒத்த பழைமையுடையன அல்லது உபநிடதங்களுக்கு முற்பட்

டன. ஆரியர் தமிழ் மதத்தைப் பின்பற்றியபோது எழுதப் பட்ட உபநிடதங்களில் ஆகம உண்மைகள் காணப்படு கின்றன.

சிவன் தமிழரது கடவுள் என எல்லோரும் ஒப்புக் கொள்கின்றனர். சிவமதம் அல்லது தமிழ் மதம் தமிழருக் குரியதென ஒப்புக்கொண்டால், ஆகமங்கள் தமிழரால் தமது மொழியில் எழுதிய நூல்கள் என்று ஒப்புக்கொள்ள ஏன் பின்னிற்கவேண்டும். மதசம்பந்தமான எல்லாத் தமிழ் நூல்களும் ஆகமங்களையே ஆதாரமாகக் கொண்டன. மத இலக்கியங்கள் மாத்திரமல்ல, பரதநாட்டில் தோன்றிய சம யக் கொள்கைகள் ஒவ்வொன்றுக்கும் ஆதாரம் இத் தமிழ் ஆகமங்களிற்றானுண்டு. திருமூலர், தமது திருமந்திரம், ஆக மங்களின் சாரம் எனக் கூறுகின்றனர். இவர் கி. பி. ஐந் தாம் நூற்றாண்டில் விளங்கியவரென நம்பப்படுகின்றது. இக் காலம் ஸ்கந்தத்துக்கு முற்பட்டது. ஸ்கந்த புராணத்துக் குச் செய்தது போலவே, பின்வந்தவர்கள் திருமந்திரத் திலும் பலவற்றைச் சேர்த்தும் திருத்தியும் மாற்றியும் இருத்தல் கூடுமென்று கருத இடமுண்டு. திருமந்திரத் தாலும் புராணங்களாலும், புராணகாலம் மட்டும் ஆகமங் கள் இருந்தன என்று கருத இடமுண்டு. புராண மதத்தில் நம்பிக்கை பரவத் தொடங்குதலும், அக்கொள்கைகளுக்கு மாறாயிருந்த ஆகமங்கள் இறந்தனபோலும்.

மேல்நாட்டாசிரியர்கள் ஸ்கந்தம் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டில் எழுதப்பட்ட நூலெனக் கூறுகின்றனர். போராசிரியர் பண்டால் (Prof Bandall) கி. பி. 6-ம் நூற் றாண்டில் எழுதப்பட்ட பிரதி ஒன்று தமக்கு நேபாளத் திற் கிடைத்ததென அறிவித்திருக்கின்றார். இதனால் புரா ணங்கள் கி. பி. 6-ம் நூற்றாண்டில் இருந்தன என்பதிற் சந்

தேகமில்லை. தென்னிந்திய ஆலயங்களைப் பற்றியும் தென்னிந்திய சமயக் கொள்கைகளைப்பற்றியும் புராணங்கள் கூறுகின்றமையின் அவை தென்னிந்தியாவில் எழுதப்பட்டனவே. இவை புராணம் என்னும் பெயர் பெற்று வடக்கே செல்ல இரண்டு நூற்றாண்டுகளாவது பிடித்திருக்கும். ஆகவே புராணங்கள் கி. பி. நாலாம் நூற்றாண்டில் எழுதப்பட்ட நூல்கள் எனக் கூறுதல் நியாயமாகும். அவை ஒன்பது அல்லது பத்தாம் நூற்றாண்டு வரையும் பலரால் எழுதிச் சேர்க்கப்பட்ட பலவற்றைக்கொண்டு பெருப்பிக்கப்பட்டனவாகும். நேபாளத்திற் காணப்பட்ட புராணம் சங்கராச்சாரியரால் எழுதப்பட்டதாகுமெனக் கருதுகின்றேம். டெலாங்(Mr. Telang) என்னும் ஆசிரியர், சங்கராச்சாரியர் கி. பி. ஆறும் நூற்றாண்டில் இருந்தாரென்பதற்குப் பல ஆதாரங்கள் காட்டியிருக்கின்றனர்.* கி. பி. ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதியில் ஹர்சவர்தன என்னும் நேபாள அரசன் சங்கராசாரியரின் மாணவனுனன், இவன் தன் மகனுக்குச் சங்கரவர்தான என்று பெயரிட்டான். சிவ புராணங்களும் ஸ்கந்த புராணமும் ஆகமங்களை விட ஸ்மிருதிப் பிரமாணங்களைப் புகழ்ந்து ஆரிய வேதங்களுக்கு முதன்மை கொடுக்கின்றன. புராணங்களின் பெயரால் இவ்வாறு கூறும் பகுதிகள் சங்கராச்சாரியரால் அல்லது அவர் மாணவராற் சேர்க்கப்பட்டனவாதல் வேண்டும். சங்கராச்சாரியரும் அவர் மாணவரும் சைவசமயத்தவராயினும் அவர்கள் மிருதிகளைப் பிரமாணமாகக் கொண்டனர். அவர்கள் சாதனை ஆகமங்களுக்கு மாறுகவிருந்தது. ஆகமங்களைக் கீழ் நிலையில் உள்ளவர்களுக்கும் வேதங்களை மேல் நிலையிலுள்ளவர்களுக்குமாகக் கடவுள் அருளிச்செய்தாரென அவர்கள் நம்பினர்கள்.

* Indian antiquary Vol XIII P. 95.

ஆகமக் கொள்கையாகிய தமிழ் மதத்துக்கும் வேதக் 'கொள்கையாகிய ஆரிய மதத்துக்கும் போராட்டம் இருந்த தெனப் புராணங்களைக் கொண்டு அறியலாம். இவ்விரண்டையும் சந்துபடுத்தவே புராணங்கள் எழுதப்பட்டன. புராணங்களை எழுதினோர் ஸ்மார்த்தராகக் காணப்படுகின்றனர். அவர்கள் ஆகமங்களிற் பற்றில்லாமற் போனதோடு, கடவுளைப் பற்றிய உண்மைகளை வேதங்களில் மாத்திரம் காணலாமென்றும் ஆகமங்களாற் பெறப்படும் ஞானம் பயனற்றது என்றும் துணிவாக எழுதியிருக்கின்றனர். இவ்வாறு சூதசங்கிதையிலும் சொல்லப்படுகின்றது. இக்கொள்கை மறுக்கப்படாமலிருக்கவில்லை. "கடவுளைக் கண்டு கொண்டும் வேதங்கள் தேடுகின்றன" என்று தமிழ் முனிவர்கள் கூறினர்.

புராணக் கதைகள், புராணங்கள் எழுதப்பட்ட காலத்து நிகழ்ச்சிக ளல்ல. புராணம் என்பதற்குப் பழைமையுடையது என்று பொருள். புராணங்களில் தமிழரின் பழைய கன்ன பரம்பரைக் கதைகள் காணப்படுகின்றன. தமிழருக்கும் அவரின் பிரிவினராகிய அக்கேடிய சாலடியர்களுக்கும் பொதுவா யுள்ளவற்றுள் சலப்பிரளயம், உலக சிருட்டி, உகம் முதலிய வரலாறுகள் சில. இக்கன்ன பரம்பரைக் கதைகளோடு கட்டுக் கதைகளும் பொய்க் கதைகளும் சேர்க்கப்பட்டுள்ளன.

பிராமணரின் பெருமையை விளக்குவதற்காகவே புராணங்கள் எழுதப்பட்டன. கடவுள் விவாகஞ் செய்து மக்களைப் பெறுதல், ஐயனார் பிறத்தல், முருகனின் இயற்கைக்குமாறான பிறப்பு ஆகியவற்றைக் கூறுதல் புராணமெழுதியவர்களின் மனோபாவனையைப் பொறுத்ததாகும். புராணமெழுதியவர்கள் சில சமயங்களிற் கடவுளைப் பசாசு

களுக்கும் கீழான நிலையிற் கொண்டு வந்து விட்டிருக்கின்றனர்.

ஆரிய வேதங்களைச் சூத்திராவது பெண்களாவது தொடுதல் ஆகாது. சூத்திரர் அல்லது எந்த வருணத்துப் பெண்ணாவது வேதங்களை வாசிக்கவும் கேட்கவும் கூடாது. ஆகவே பெண்களும் சூத்திரரும் மோட்சத்துக்கு அருகரல்லர். தமிழருடைய சமயம் ஆண் பெண் என்ற வேற்றுமையின்றி எல்லோருக்கும் பொதுவானது. பிரதிபலனை விரும்பாத அன்பே தமிழர் சமயம். யாகங்கள் வாயிலாகக் கடவுளருடைய பசியையும் தாகத்தையும் தணித்தால் அக் கடவுளர் பிரதி உபகாரமாகச் சில நன்மைகளைப் புரிவார்கள் என்று ஆரியர் கருதினர். தமிழரின் கடவுள் அன்பே:—

> " அன்புஞ் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
> அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்
> அன்பே சிவமாவ தாரு மறிந்தபின்
> அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே "

எனத் திருமூலர் கூறுகின்றனர்.

முற்காலச் சைவத்துக்கும் இக்காலச் சைவத்துக்கும் வெகுதூரம். தமிழர் ஆரியர் கலப்பும், பொய்யும் புளுகும் புனைந்து பிராமணராற் கட்டிய புராணங்களுமே இதற்குக் காரணம். முற்காலப் பிராமணர் உண்மை ஞானத்தில் ஆர்வங் கொண்டிருந்தனர். அவர்களின் பிற்சந்ததியார் ஞானமின்றிப் பிறப்புரிமையைத் தமது பெருமைக்கு அடிப்படை எனக்கொண்டனர். பிறர் குற்றங் காணுவார்கள் என்னும் பயத்தால் தம்முன்னோர் மறைத்து வைத்திருந்த வேதங்களையும் பிராமணங்களையும், பிற்போக்குடைய இவர்கள் ஆதரிப்பதோடு தாம் தமிழரிடம் கற்றுக்கொண்ட ஞானங்களும் வேதங்களில் உண்டு எனக் கூறினர்.

இடியையும் முழக்கத்தையும் உண்டு பண்ணும் பயங்கர மான உருத்திரனைச் சாந்தமும் அன்பும் வடிவாகிய சிவன் என்று கூறினர். பின் விட்டுணு பிரமா என்னும் இருவ ரோடும் சிவனைச் சமனாக வைத்து இழிவு படுத்தினர். இவ் வாறு மும்மூர்த்திகள் எனக்கொண்டு சிவனுக்கு அழித்தற் றொழிலை உரிமை யாக்கினர். சிவனே ஐந்து தொழில்களை யும் செய்கின்றார் என்று * இன்றும் தமிழர் கொள்கின் றனர். அவர் மும் மூர்த்திகளுக்கும் அப்பாற்பட்டவ ரென்று முனிவர்கள் பாடியிருக்கின்றனர்.

" அரியுமல்ல அரனுமல்ல அயனுமல்ல வப்புறம்
கருமை வெண்மை செம்மை கடந்து நின்ற காரணன்
பெரிதுமல்ல சிறிதுமல்ல பெண்ணு மாணுமல்லவே
துரிதமுங்கடந்து நின்ற தூர தூரமே."

எனச் சிவவாக்கியர் கூறுகின்றனர்.

தமிழர் அன்பைக் கடவுளென்றனர். அன்பினின்றும் பிரிக்கவொண்ணாத அருளைச் சத்தி உமை அல்லது அம்மை என்றனர். உருத்திரனைச் சிவனெனக் கூறினதுமல்லாமற் பயங்கரமான துர்க்கை அல்லது காளியைச் சிவனது மனைவியாகவும் புராணகாரர் எழுதிவைத்தனர். துர்க்கை, காளி முதலிய பெயர்கள் அக்கினியின் ஏழுநாக்குகளுக்குப் பெயராக வேதங்களிற் சொல்லப்படுகின்றன. அங்கே சொல்லப்பட்ட உருத்திரன் அக்கினியாவான். அன்பும் அருளுமெனத் தமிழர் கொண்டமுறை புராணங்களுக்கும் பிராமணருக்கும் விரோதமாயிருந்தது. ஆகவே அவர்கள் சத்தியென்பது வேறு பெண்தெய்வமெனக் கருதினர். சிவ பெருமானின் மனைவியைப்பற்றி அவர்கள் விநோதமான கதைகளைக் கற்பித்திருக்கின்றனர். " சதபதப்பிராம

* படைத்தல், காத்தல், அழித்தல், அருளல், மறைத்தல்.

ணத்தில் பார்வதி யாகஞ் செய்தாள் என்று சொல்லப்படு கின்றது. ஆனால் சிவனுடைய மனைவியும் தக்கனுடைய மகளுமாகிய பார்வதி யாகத்தில் உயிர் விட்டாளென்று புராணகாரர் சேர்த்து எழுதியிருக்கின்றனர். கேனோ உப நிடதத்தில் உமாஹய்மாவதி இந்திரனுக்குப் பிரமனுடைய தன்மையைக் கூறுகின்றார். இந்த உமா ஹய்மாவதி இமய மலையிற் பிறந்தாளென்று புராணங்கள் கூறுகின்றன. இவையெல்லாம் புராணகற்பனை.*

பழைய சித்தாந்த முறையாற் கடவுளை விளக்குவதற் கும் பிராமணருடைய புராண முறையாற் கடவுளை விளக்கு வதற்கும் உள்ள தூரம் மிகப் பெரிது. கடவுள் 'அம்மை அப்பர்' என்னும் தன்மையரென்பது சித்தாந்தத்தின் துணிபு. புராணமதத்துக்கு முன் இதுவே தமிழர் கொள் கையாயிருந்தது. தமிழர்களின் மனம் உண்மை நெறியை நாடுவதா யிருந்தது. எல்லா உலகங்களும் கடவுளின் ஆணை யால் நடைபெறுகின்றன வென்றும், அவை எல்லாம் அவ ரிடத்தில் ஒடுக்கம் என்றும் தன்னய மற்றிருத்தலினால் மோட்சம் கைகூடு மென்றும் மற்றவர்களுக்குத் தருமஞ் செய்தல் வேண்டு மென்றும் தமிழர்கள் நம்பினார்கள்.

ஆரியருடைய பிராமணங்கள் அல்லது பிற்காலப் புரா ணக் கொள்கைகள் தமிழருடைய நியாய முறையான கொள்கைகளைத் தமிழ் நாட்டினின்றும் அகற்ற முடிய வில்லை. ஆரிய மதக் கலப்பினால் தமிழர் சமயம் நிலை குலைந் தது. அப்பொழுது புத்த சமயந் தோன்றி அக்காலத்துக் கேற்றவாறு பொய்யான கொள்கைகளை எதிர்த்தது. ஒரு ஆயிரம் வருடங்களுக்குப்பின் பிராமணர் அதை நெருப்

---

* Ancient India p. 651—R. C Dutt.

பாலும் வாளாலும் போராலும் இந்தியாவினின்றும் துரத்தினர். இம்மதத்தை எதிர்த்த மதங்கள் சீவனைப் பெற்றன.

புராண மதந்தான் சரியான இந்துமதமென அயல் நாட்டவர்கள் நினைக்கின்றனர். அதில் தமிழருடைய கொள்கைகள் முற்றாக இருக்கின்றனவென்று கூறமுடியாது. இப்புராண மதத்தை முனிவர்கள் எதிர்த்தார்கள். ஆயினும் அறியாமையுடைய மக்களின் உள்ளத்தில புராணக் கொள்கைகள் பதிந்து விட்டன. பிராமண மதத்தினாற் கெடுதியுற்ற போதும் தென்னிந்திய ஞானம், சித்தாந்தம் என்னும் பெயரோடு இன்றும் வழங்குகின்றது.

சித்தாந்த சாத்திரம் மெய்கண்ட தேவரால் 13-ம் நூற்றாண்டிற் செய்யப்பட்டது. அச்சாத்திர ஞானம் ஆகமங்களை ஆதாரமாகக் கொண்டது. இந்தியாவில் எவ்வகையான சமயந் தோன்றினும் அதற்கு அடிப்படையாயுள்ளது தமிழ் ஞானத்தைக்கூறும் ஆகமமே. ஆகமங்கள், தமிழ் ஞானத்தையும் தெக்கணாமூர்த்தியாயிருந்து தம்மை அருளிச்செய்த கடவுளைப் பற்றியும் கூறுகின்றன. தெக்கணாமூர்த்தி என்பதற்குத் தென் தேசத்துக் கடவுள் என்பது பொருள். ஆகமங்களைக் கடவுள் மகேந்திரமலையிலிருந்து சொன்னார் என்று ஐதீகம் உண்டு. மகேந்திரமலை, திருநெல்வேலிக்கும் திருவாங்கூருக்கு மிடையில் மேற்குக் காற்றாடிமலையிலுள்ள பொதியமலையிலுள்ளது. மூல ஆகமங்களில்லாமையால் இது சம்பந்தமாக அதிகம் கூறமுடியாமலிருக்கின்றது. இப்போது கிடைத்திருக்கும் விபரங்களால் ஆகமங்கள் பல இருந்தனவென்றும் அவற்றுள் இருபத்தெட்டுப் பிரதானமானவை என்றும் அறிந்து கொள்ளல் ஆகும். அவை எல்லாம் காலத்தின் வாய்ப்பட்டு மடிந்தன. இரண்டொரு சைவ ஆகமங்களைத் தவிர

வேறு கிடைக்கவில்லை. அவ்வொன்று இரண்டும் சமக்கிருத மொழி பெயர்ப்பாயுள்ளன. மற்றவை மொழி பெயர்க்கப்படாமலே இறந்தன. பலநூற்றாண்டுகளாகச் சைவத்தை எதிர்த்த மதமே கிடையாது. சரித்திர காலத்துக்கு முன்தொட்டு ஆகமஞானத்தைத் தழுவிய மதமே இந்தியாவில் இருந்தது. புத்த சைன மதங்கள் தோன்றித் தெற்கே சென்று சைவசமயத்தை நசுக்கத் தொடங்கினதினாலும், புராண இலக்கியங்களாலும் உண்மையான சைவம் தனது பரிசுத்த நிலையை இழந்து கட்டுக் கதை அளவில் நிலவத் தொடங்கிற்று. அப்போது தமிழருக்குத் தமது மதக் கொள்கைகளை நாட்டிப் பிற மதங்களைக் களைவது அவசியமாயிற்று. அப்பொழுது ஆகமஞானங்கள் திரட்டப்பட்டுச் சித்தாந்த நூல்கள் எழுதப்பட்டன. இவற்றின் தொகை பதின்நாலு. அவற்றில் பிற்காலத்திய பல சமக்கிருத சொற்கள் காணப்படுகின்றன.

புராண கால ஆரம்பத்திலிருந்து சமக்கிருதத்துக்கு மேன்மை ஏற்பட்டது. இம்மேம்பாட்டால் சமக்கிருதம் கடவுட்டன்மை உள்ளதென்னும் மூடக்கொள்கையும் எழுந்தது. அம்மொழியில் எழுதப்பட்ட வேதங்களில் எல்லாவகையான ஞானமும் உண்டென்னும் நம்பிக்கையும் ஏற்பட்டது. இடைக் காலத்தில் இலாத்தின் கிரீக் முதலிய மொழிகள் ஐரோப்பாவில் எப்படி மதிக்கப்பட்டனவோ அப்படியே வடமொழி, தமிழிலும் சிறப்புடையதாகக் கொள்ளப்பட்டது. கிரேக்க இலாத்தின் மொழிகளைப்போல வடமொழி சமய மொழியாகவும் வந்தது. தமிழ் ஞானத்துக்குச் சித்தாந்தம் என்னும் பெயர் இடப்பட்டது நூதனமன்று. சித்தாந்த சாத்திரத்தில் பதி பசு பாசம் என்னும் முப்பொருள்களின் உண்மை கூறப்படுகின்றது. தமிழ

ருடைய ஞானமுதிர்ச்சியைத் தேவார திருவாசகங்களைக் கொண்டறியலாம். கி. பி. ஐந்தாம் நூற்றாண்டில் விளங்கியவரென்று கருதப்படும் திருமூலர் இச்சாத்திர உண்மைகளைத் திருமந்திரத்தில் விளக்குகின்றார். திருமூலர் கூறுவது போலத் திருமந்திரம் ஆகமங்களின் சுருக்கமாகும். ஆகவே ஆகமங்கள் திருமூலர் திருமந்திரகாலத்தும் சித்தாந்த சாத்திரங்கள் செய்தவர்கள் காலத்தும் இருந்தனவென்று தெரிகிறது. பழைய தமிழர் சமயஞானத்தைக் கூறும் நூல்களின் தொகைகள் ஆகமங்களெனப்படும் அத்தகைய நூல்களை எழுதியவர்களின் பெயர் மறந்து விடப்பட்டன. மனிதர் பிழைவிடும் இயல்பினர் என்னும் எண்ணத்தினலேயே முன்னோர் அவை கடவுளால் அருளிச் செய்யப்பட்டன என்று கருதினர். வேத பாடல்களைச் செய்த ஒவ்வொரு முனிவரின் பெயரும் காணப்படுகின்றது.

வடக்கே வாழ்ந்த தமிழர் சூரியனை வணங்கினர்களென்றும் தெற்கே உள்ளவர்கள் சிவனை வணங்கினர்களென்றும், அகத்தியர் வடக்கே சென்று சைவத்தைப் பரப்பினரென்றும் முன் ஓரிடத்திற் கூறினேம். ஆகவே சைவத்தைப் போலவே ஆகமங்களும் தெற்கே மகேந்திரத்தில் தோன்றின என்று கருத இடமுண்டு. *

* திருவாசகத்திற் பல விடங்களில் ஆகமங்கள் மகேந்திரத்திற் றோன்றின என்று சொல்லப்படுகின்றது. "மன்னுமாமலை மகேந்திரவெற்பன்" "தென் பாண்டிநாட்டான்". மகேந்திரமலை மந்தர மலை எனவும்படும். அதற்குக் "குருவாய்" என்றும் பெயர். குருவாய்க்கு எதிர்கரையிலுள்ளது அலைவாய். இங்கு குமரன்கோட்டமிருக்கிறது. செந்தில், திருச்செந்தூரென அதற்கு மறுபெயர்கள்.

குருவாய் சிவனுக்கு இடமென்று கருத இடமுண்டு. இதனையே சமக்கிருத புராணகாரர் இமயமலைச்சிகரம் ஒன்றெனக்

வேதம் பசு என்றும் ஆகமம் அதன்பாலென்றும்சிலர் கூறுவதுண்டு. ஆராய்ச்சி முறையில் வேதமும் ஆகமமும் நேர் விரோதமுடையன வாய்க்காணப்படுகின்றன. வேதங்கள் பல தெய்வ இயற்கைப் பொருள் வணக்கங்களைக் கூறுகின்றன. ஆகமங்கள் ஒரே கடவுளை முழு முதலாகக் கொண்டு வழிபடும் முறையைக் கூறுகின்றன. ஆகமங்கள் வேதங்களுக்கு விரோதமானவையென்றும் ஆகமஞானம் வேத அறிவைவிட மிகமேலான தென்றும் எம். நாராயணசாமி ஐயர் கூறுகின்றனர்.

புராணங்கள் வேதங்களைப் புகழ்வதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. புராணங்கள் தமிழ்க் கொள்கைகள் சிலவற்றோடு வேதக் கொள்கைகளையும் கலந்து எழுதப்பட்ட நூல்களாகும் புதிய மக்களுக்கு வேதங்கள் ஆதாரமாயின. புராணப் போக்குக்கு ஆகமங்கள் இடங் கொடாமையால்அவர்கள் ஆகமங்களிலும் வேதங்களே பிரமாணமெனக் கூறினர். வேதங்களுக்கு முன் ஆகமங்களுண்டென்னும் உண்மை ஆராய்ச்சியாற் பெறப்படுதலின் வேதத்தினின்றும் ஆகமம் பிறந்ததென்னுங் கொள்கை பொய்யாகின்றது.யாகங்களைக் கூறும் ஆரியர் நூல்கள் இறந்தன. ஆலயவழிபாட்டைக்

---

கொண்டனர். மனுவின்பேழை தங்கியதாகச் சதபதம் பிராமாணம் கூறும் வடமலே பொதியில் அல்லது ஸ்ரீபருவதமென அறியக்கூடாமலிருக்கின்றது. தென்னாட்டுக் கதைகளை வடநாட்டார் பார்த்தெழுதுமிடத்துத் தென்னிந்தியாவில் நிகழ்ந்தவற்றை எல்லாம் வட நாட்டில் நிகழ்ந்தனவாக எழுதியிருக்கின்றனர்.

* "From the little I have seen of them they (the Agamas) seem to be opposed to the Vedas and almost aspire to arrogate to themselves position much superior."

கூறும் ஆகமங்கள் தமிழராலும் தமிழ் மதத்தைத் தழுவிய ஆரியராலும் கைக் கொள்ளப் பட்டன.

வேத பாடல்களில் ஆலயவழிபாடு கூறப்படவில்லை. ஆலயங்களும் ஆலயவழிபாடும் ஆரியருக்குரியவையல்ல. பழையநாள்தொட்டுக் கடவுளின் இருப்பிடமாகிய ஆலயங்களிருந்த தென்னிந்திய, அசீரிய, பபிலோனிய ஆலயங்களின் அமைப்பு ஒரே வகையாகக் காணப்படுகின்றன. தமிழரின் சரித்திரத்தை அறியாமையால் மேல் நாட்டாசிரியர்கள் தமிழர் கட்டிடமமைக்கும் முறையை அசீரிய பபிலோனியரிடம் கற்றூர்கள் எனக் கூறினர். புத்த சமயத்துக்குப்பின் தான் தமிழர் கட்டிடமமைக்கும் முறையைப் பயின்றூர்கள் என்னும் ஐரோப்பிய ஆசிரியர்களின் கூற்று முற்றும் பிழையானது. மாபாரதம் சிவாலயங்களைப்பற்றிக் கூறுகின்றது. அருச்சுனன் சிவபெருமானைக் கைலாயத்திற் சென்று வழிபட்டான். கைலாயமென்பது குருக்ஷேத்திரத்துக்குப் பக்கத்தில் ஓர் குன்றின்மேலுள்ள ஆலயமாகும். யுத்தகாலத்தில் ஓர் இரவில் அருச்சுனன் கிருட்டிணனோடு கைலாயத்துக்குப் போய்த் திரும்பிவந்தான் என்று சொல்லப் படுகின்றது. கைலாயம் என்பது கோயில் என்பதன் திரிபு ஆதல் கூடும்.

பிராமணர்களின் தமிழ் வெறுப்பு, தமிழ்மொழி குன்றுதற்கும் தமிழ் நூல்கள் பலவற்றின் அழிவுக்கும் ஏதுவாயிருந்தது. தமிழ் நாட்டின் பலபகுதியை வாய்ப்படுத்திக்கொண்ட கடல் பல நூல்களையுங்கொண்டது. கி. பி. 10-ம் நூற்றூண்டிற் பிராமணராலும் 14-ம் நூற்றூண்டில் மகமதியராலும் அநேகம் நூல்கள் அழிக்கப்பட்டன. "அரசரின் பரிபாலனத்தின் கீழ்த் தோன்றிய நூல்கள் காணப்படவில்லை. அந்நூல்கள் 14-ம் நூற்றூண்டில் மகமதியரால்

அழிக்கப்பட்டன'' என்று வின்ஸ்லோ பாதிரியார் கூறியுள்ளார்.

"பிராமணர் தாம் அழிக்கமுடியாத நூல்களைச் சிதைவு படுத்தினர். வெள்ளத்தாலும் நெருப்பாலும் நேர்ந்த கொள்ளையில் இது மேலானது. தமிழ் நூல்களை எடுத்து சமஸ்கிருதத்தில் மொழி பெயர்த்துப் பல கேடுசெய்திருக்கின்றனர். பிழையான வழிகாட்டியிலும் வழி காட்டியில்லாமலிருப்பது நன்று என கோவர் (Gover) என்னும் ஆசிரியர் கூறுவர். முண்டகோப உபநிடதத்தில் "சிவன் என்னும் நாமத்தைக் கூறுகிறவன் புலையனுயினும் அவனோடு உண் இரு'' என்று வரும் பகுதி மாக்ஸ் முல்லரின் மொழி பெயர்ப்பிற் காணப்படவில்லை என்று காசிவாசி செந்திநாதையர் கூறியிருக்கின்றனர். இவ்வாறே நூல்களில் மாற்றங்களும் இடைச் செருகல்களும் நுழைந்தன.

---

*

# சில குறிப்புக்கள்

* "மொகஞ்சதரோ அரப்பா என்னும் இடங்களிற் கிடைத்த ஆயிரத்து எண்ணூறு பட்டையங்களிற் பொறிக்கப்பட்டுள்ள வைகளை வாசித்தபின், இவ்வாசிரியர், மத்தியதரைச் சாதியினரே இந்திய நாட்டில் வந்து குடியேறினார்கள் என்னும் கருத்துத் தவறான தென்றும், இந்திய மக்களே மத்தியதரை நாடுகளிற் சென்று குடியேறினார்கள் என்றும் துணிகின்றார்"

—ஹெறஸ் பாதிரியார்

§ "நாங்கள் எல்லாவற்றையும் ஆரிய அல்லது பிராமணக் கண்ணாடியைக்கொண்டு பார்ப்பதைத் தவிர்க்கவேண்டும். எழுதப்பட்டுள்ளன வெல்லாம் ஆரிய அச்சுக் கூடாக வந்துள்ளன. பிராமண எழுத்தாளர் பழைய நிகழ்ச்சிகளையும் குடும்ப உற்பத்திகளையும் பிறவற்றையும் மனம்போல எழுதியுள்ளார்கள். ஆகவே அவை பழங்கதை அளவில் மாத்திரம் நிலை பெறுகின்றன. ஆரியரல்லாத மக்களைப் பற்றிய செய்திகள் கூறாது விடப்பட்டுள்ளன அல்லது அவர்கள் இருபிறப்பினரால் வெல்லப்பட்ட அரக்கர், அல்லது மிலேச்சர் எனக் கூறப்பட்டுள்ளார்கள்.

—பாடின் பௌவெல்

---

* Journal of Indian History Vol. XII-P. 431.

§ At any rate we may be on our guard against king at everything through Aryan or Brahmanical ectacles.........that almost everything has passed to written form has been cast in an Aryan mould. or real histary the Brahmanic writers never cared

வட இந்தியாவில் ஒருகாலத்தில் திராவிட சாதியினரே பரந்து வாழ்ந்தார்கள் என்பதற்குரிய சான்றுகள் உள்ளன.

‡ எச். ஆர். ஹால் என்பவர், செமித்தியரின் வருகைக்கு முன் பாபிலோனியாவின் நாகரிகத்தை முற்றுவித்த சுமேரியர் திராவிடர்கள் எனக் கூறியுள்ளார்... திராவிடமொழிகள் சமஸ்கிருதத்தினின்றும் பிறந்தனவல்ல. பழமையைநோக்கிச் செல்லச் செல்லத் திராவிட இலக்கியங்களில் சமஸ்கிருதச் சொற்கள் அருகிக் காணப்படுகின்றன. கிரேக்க வாணிகரின் எழுத்துக்களைக்கொண்டு, திராவிடமொழிகளில் சென்ற இரண்டாயிர மாண்டுகளாக மாற்றமுண்டாக வில்லை என அறியலாம். இதற்குச் சான்று இன்னும் மிகப் பழங்காலத்திற் காணப்படுகின்றது. சாலமன் மயிலைக்குறிக்க அறிந்திருந்த பெயர் தமிழ்.

—எல். ஜே. றிச்சர்ட்ஸ்.

---

anything: early events and family origins invariably assume a mythic guise, and everything about non-Aryan race is either omitted or only noticed the conquest of the 'twice born' over the 'demons' and 'barbarians'.—The Indian village community P. 91. B. H. Baden Powell M.A. C.I.E.

‡ Side lights of Dravidian Problem.

F. J. Richards I.C.S. M.A. M.R.A.S. F.R.A.I.—Quarterly Journal ol Mythic Society Vol. 6. No. 3.

---

Printed at the Sri Magal Vilasam Press, G. T. Madras.